# அருளிறங்கும் பருவகாலம்

## ரஜபு—ஷஅபான்—ரமழான்

وَذَكِّرْهُمْ بِأَيَّامِ اللَّهِ

"அல்லாஹ்வுடைய நாட்களை அவர்களுக்கு நினை வூட்டும்'' என ஏவுகிறது அல்லாஹ்வின் திருமறை —(14 : 05)

நாட்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியனவாயினும் அவனுடைய அத்தாட்சிகள் பிரத்தியேகமாக வெளிப்பட்ட நாட்களையே 'அல்லாஹ்வுடைய நாட்கள்' என திருக்குர் ஆன் குறிப்பிடுவதாக விரிவுரையாளர்கள் விவரிக் கின்றார்கள்.

தன் அருட்பேறுகளை மறந்த—தன் ஆற்றலைப் புறக் கணித்தலைந்த மனித வர்க்கத்திடையே அவன் தன் ஆதா ரங்களை அந்நாட்களில் நிலை நாட்டினான்; அவ்வாதாரங் களைச் சுமந்து வந்த அவனுடைய தூதர்கள்—நபிமார்கள்— ரஸூல்மார்கள் மீது பல்வேறு அருள்மாரிகளைப் பொழிந் தான். அவற்றை அங்கீகரித்து வழிப்பட்ட நல்லடியார் களுக்கும் அவன் தன் அருள்வாசல்களைத் திறந்து வைத் தான். அத்தகைய அருள் நிறைந்த நாட்களையே 'அல்

லாஹ்வுடைய நாட்கள்' என அருள் மறை குர்ஆன் சுட்டிக் காட்டுகிறது.

முந்திய வரலாறுகளின் மூலம் பிந்திய வழிவாறுகள் படிப்பினை பெறவேண்டுமென்பதற்காக அவற்றைத் தன் அடியார்களுக்கு நினைவூட்டும்படியாக அல்லாஹ் நபிமார் களுக்குக் கட்டளையிட்டான்.

அல்லாஹ்வுடைய அந்நாட்கள் நினைவூட்டப்படுகை யில் முந்திய சமுதாயங்கள் வாழ்ந்த மவுட்டீக நிலைகள் நமக்கு விளங்குகின்றன. அவர்களைத் திருத்த வந்த தூதர் கள், தங்களின் பயணப் பாதைகளில் சந்திக்க நேர்ந்த சிரமங்கள், அச்சிரமங்களைச் சகித்துச் சுமந்த அப்பெரியோர் கள் தங்கள் பொறுமைக்குரிய பரிசுகளாக ஏற்ற சன் மானங்கள் அனைத்தும் வெளிச்சம் பெறுகின்றன.

நபிமார்களின் அழைப்புக்கு வழிப்பட்ட நல்லோர்களை இறைவன் தன் அருளினால் வளம் பெறச் செய்த வரலாறு கள், நன்மையான வழியின் புறம் திரும்பத் துணிவோர்க்கு உணர்வூட்டும் நன்மாராயங்களாக விளங்குகின்றன. தன் தூதர்களின் வழிகாட்டுதல்களுக்கு முரண்பட்டவர்களை அல்லாஹ் தன் வல்லமையினால் தோற்கடித்த சம்பவங்கள் தடுமாறும் மனித வர்க்கத்துக்கு எச்சரிக்கைகளாக நின்று அச்சமூட்டுகின்றன.

மனிதர்களுக்கு வழிகாட்ட நபிமார்கள் அந்த மனித வர்க்கத்திடையிலிருந்தே அனுப்பப்பட்டது, அல்லாஹ் மனித வர்க்கத்தின் மீது புரிந்த பேருபகாரமாகும். அப்படியல்லா மல் மலக்குகளிலிருந்தோ ஜின்களிலிருந்தோ நபிமார்கள் அனுப்பப்பட்டிருப்பார்களேயானால் அவர்களைப் பின் தொடர மனித வர்க்கம் பெரும் சிரமங்களை ஏற்க வேண்டியதே ஆகியிருக்கும். எனினும் மனிதர்களில் பெரும் பாலோர் அதனை உணர்ந்தவர்களாயிருக்கவில்லை.

மனிதர்களிடையே மனிதர்களாகவே அனுப்பப்பட்ட நபிமார்களை சாதாரண மனிதர்களாகவே கணித்து அவர்களுக்குக் கொடுமைகளை இழைத்தது மனித வர்க்கம். அவற்றைப் பொறுமையுடன் சகித்து, தாங்கள் ஏற்று வந்த கருமங்களைச் செய்து முடித்தார்கள் அந்நபிமார்கள். சோதனைகள் அவர்களை எதிர்கொண்ட சந்தர்ப்பங்களிலெல்லாம் அல்லாஹ், மனிதக் கற்பனைகளுக்கு மட்டுப்படாத 'முஉஜிஸா' எனப்படும் பிரத்தியேக வல்லமையைத் தன் தூதர்களுக்கு அத்தாட்சிகளாக அருள் புரிந்து அவர்கள் தங்கள் எதிரிகளை மிகைத்து நிற்கச் செய்தான்.

إِنَّ فِي ذَٰلِكَ لَآيَاتٍ لِّكُلِّ صَبَّارٍ شَكُورٍ ○

(''கஷ்டங்களைச் சகித்துப்) பொறுமையுடனிருப்போர் நன்றி செலுத்துவோர் ஆகிய யாவர்க்கும் நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன—என வான்மறை (14 : 05) சுட்டிக் காட்டுவது இதையே!

அல்லாஹ்வுடைய—அத்தகைய அத்தாட்சிகள் தங்களுக்கு வழங்கப்பட்ட—நாட்கள், அல்லாஹ்வின் அருள் தங்களைச் சூழ்ந்த நன்னாட்கள் வாழ்க்கையில் மீண்டும் மீண்டும் எதிர்பட்டபோதெல்லாம் அத்தூதர்கள் அல்லாஹ்வின் கருணையை நன்றியுணர்வுடன் நினைவு கூர்ந்தார்கள்; அருள் சூழ்ந்த அந்நினைவிலேயே அவர்கள் பசியைத் துறந்தார்கள்; உறக்கத்தை மறந்தார்கள்.

அண்ணலார் நாயகத் திருமேனி (ஸல்) அவர்களுக்கும் அத்தகைய அத்தாட்சிகள் வழங்கப்பட்ட நாட்கள் பல உண்டு. அவற்றுள் ஐந்து முக்கிய இரவுகளை ஞானிகள் நாயகம் முஹிய்யத்தீன் ஜீலானி (ரழி) அவர்கள் குறிப்பிட்டுக் காட்டுகிறார்கள். ஒரு நாள் என்பது இரவையும்

பகலையும் கொண்டதேயாகும். சந்திரக் கணிப்பாகிய இஸ்லாமிய நாள் இரவிலிருந்தே துவங்குகிறது.

ஞான நாயகர் குறிப்பிடும் அவ்வைந்து இரவுகளாவன :

1. அண்ணலார் (ஸல்) அவர்கள் சந்திரனைப் பிளந்து காட்டிய இரவு,

اقْتَرَبَتِ السَّاعَةُ وَانشَقَّ الْقَمَرُ ۝

''மறுமை நாள் நெருங்கி விட்டது. (அதற்கு அறிகுறியாக) சந்திரனும் பிளந்து விட்டது'' என திருமறை (54 : 01) சுட்டிக் காட்டும் அந்த நிகழ்ச்சி அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட மகத்தான அத்தாட்சியாகும்.

பனீ இஸ்ராயீல்களோடு எகிப்தை விட்டும் புறப்பட்ட ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களின் பாதையில் ஒரு தடையாக நைல் நதி குறுக்கிட்டது. அதனைப் பிளந்து பாட்டையமைக்கும் வல்லமையை அல்லாஹ் ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களுக்கு வழங்கினான். அந்த ஆற்றலை வெளிப்படுத்த ஹழ்லரத் மூஸா [அலை] அவர்கள் தங்கள் கைத்தடி கொண்டு நதியின் மீது அடிக்க வேண்டியிருந்தது. இறைவனின் கட்டளையும் அவ்வாறே.

فَأَوْحَيْنَا إِلَىٰ مُوسَىٰ أَنِ اضْرِب بِّعَصَاكَ الْبَحْرَ ۖ فَانفَلَقَ فَكَانَ كُلُّ فِرْقٍ

''ஆகவே நாம் மூஸாவை நோக்கி, ''நீர் உம்முடைய தடியினால் இச்சமுத்திரத்தை அடியும்'' என வஹீ அறிவித்தோம். (அவர் அவ்வாறு அடிக்கவே) அது (பல வழிகளாகப்) பிளந்து விட்டது...'' என வான்

மறை (26 : 63) ஹழ்ரத் மூஸா (அலை) அவர்களின் வரலாற்றைக் கூறுகிறது. அந்தச் சிரமமும் கூட அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்கு ஏற்படவில்லை. அவர்கள் தங்களின் விரல் முனையை அசைக்கக் கண்டே சந்திரன் இரு கூறாகப் பிளந்துப் பிரிந்த காட்சியை மக்காவாசிகள் மட்டுமின்றி உலகின் பல பாகத்தினரும் கண்ணுற்றனர். அண்ணலார் (ஸல்) அவர்களை அல்லாஹ்வின் அருள் சூழ்ந்த ஒப்பிலா நிகழ்ச்சியாக அதனை அப்துல் காதிர் ஆண்டகை [ரஹ்] அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

2. அவர்கள் குறிப்பிடும் — அருள் சூழ்ந்த இரண்டாம் இரவு, அண்ணலார் (ஸல்) அவர்கள் ஓதிக் காட்டியபோது மக்க நகர மனிதர்கள் புறக்கணித்த இறைமறை வசனங் களை ஜின்களே வந்து செவியுற்ற இரவாகும்.

وَإِذْ صَرَفْنَآ إِلَيْكَ نَفَرًا مِّنَ الْجِنِّ يَسْتَمِعُونَ الْقُرْآنَ

(''நபியே!) இந்தக் குர்ஆனைக் கேட்கும் பொருட்டு நாம் ஜின்கள் சிலரை உம்மிடம் வருமாறு செய்தோம்'' என இறைவன் இச்சம்பவத்தைத் தன்னுடைய ஓர் அருளாகவே குறிப்பிடுகிறான் திருமறையின் (46 : 29) வச னத்தின் மூலம்.

3. மூன்றாம் இரவு நிர்மாணங்களும் கட்டளைகளும் பிறக்கப்படும் இரவாகும்.

فِيهَا يُفْرَقُ كُلُّ أَمْرٍ حَكِيمٍ

''அறிவார்ந்த சகல (காரணங்களும்) காரியங்க ளும் அதில்தான் நம்முடைய கட்டளையின்படி நிர்மா ணிக்கப்படுகின்றன'' என வான்மறை(44 : 04)குறிப்பிட்

டுக் காட்டும் அவ்விரவு ஷஅபான் மாதத்தின் பதினைந்தாம் இரவாகிய 'பராஅத்' இரவாகும்.

4. ஞான நாயகர் குறிப்பிடும் நான்காம் இரவு, நெருக்க மிக்க (மிஉராஜ்) இரவு.

سُبْحٰنَ الَّذِىْٓ اَسْرٰى بِعَبْدِهٖ لَيْلًا مِّنَ الْمَسْجِدِ الْحَرَامِ اِلَى الْمَسْجِدِ الْاَقْصَا

தம் அடியார் (முஹம்மத்-ஸல்-) அவர்களை(க்கஅபாவாகிய) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு துாரத்திலிருக்கும் பைத்துல் முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு ஓர் இரவில் அழைத்துச் சென்ற (அல்லாஹ்-) அவன் மிகத் தூயவன்—என புகழ்கிறது திருக்குர்ஆன் (17 : 01). அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளுரைப்படி, அந்த இரவில் அல்லாஹ்வுடன் அவர்களுக்கேற்பட்ட நெருக்கம் மற்றெந்த படைப்புக்கும் கிட்டாத ஒரு பேறாகும்; எந்த பிற மனிதருக்கும் கிட்டாத ஓர் அரும் பேறாகும்; வேறெந்த நபிமார்களுக்கும் கிட்டாத பெரும் பேறாகும்.

5. ஐந்தாம் இரவு விண்ணவர்கள் மண்ணுலகில் சஞ்சரிக்கும் சவுபாக்கியம் நிறைந்த இரவாகும்.

لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ ۝ تَنَزَّلُ الْمَلٰٓئِكَةُ وَالرُّوْحُ فِيْهَا
بِاِذْنِ رَبِّهِمْ ۚ مِنْ كُلِّ اَمْرٍ ۝ سَلٰمٌ ۛ هِىَ حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ ۝

''கண்ணியமிக்க அந்த இரவு ஆயிரம் மாதங்களையும் விட மேலானதாகும். அதில் மலக்குகளும் (ஜிப்ரஈலாகிய பரிசுத்த) ஆவியும் தங்கள் இறைவனின் கட்டளையின் பேரில் (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர்—சாந்தி சமாதானத்துடன்—

(அவ்விரவு) விடியற்காலை உதயமாகும் வரையில்'' என்கிறது அல்லாஹ்வின் அருள்மறை. (97 : 3 to 5)

**அ**றிவியல் மேதை இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் தங்களின் 'இஹ்யா' வென்னும் அறிவு நூலில் அருள் நிறைந்தனவாய்ப் பதினைந்து இரவுகளையும் பத்தொன்பது பகல்களையும் தொகுத்தளித்துள்ளார்கள்.

(1) முஹர்ரம் மாதத்தின் முதல் இரவு (2) ஆஷூரா நாளின் முன்னிரவு, ரஜபு மாதத்தின் (3) முதலாம் (4) பதினைந்தாம் (5) இருபத்து ஏழாம் இரவுகள் (6) ஷஅபான் மாதத்தின் மத்திய இரவு, ரமழ்லான் மாதத்தின் (7) பதினேழாம் (8) இருபத்து ஒன்றாம் (9) இருபத்து மூன்றாம் (10) இருபத்து ஐந்தாம் (11) இருபத்து ஏழாம் (12) இருபத்து ஒன்பதாம் இரவுகள் (13) ஷவ்வால் மாதத்தின் (ஈதுல் பித்ருடைய) முதல் இரவு [14] அரஃபா நாளின் முன்ரவு (15) ஈகைத் திரு நாளாகிய ஹஜ்ஜுப்பெருநாள் இரவு ஆகியவையே அவர்கள் குறிப்பிட்டுள்ள பதினைந்து இரவுகளாகும்.

இனி, அவர்கள் காட்டும் பத்தொன்பது பகல்களாவன :

[1] ஆஷூராவுடைய பகல் [2] மிஉராஜுடைய இரவை யடுத்த பகல் [3] ஷஅபான் மாதத்தின் பதினைந்தாம் பகல் [4] பத்ருப் போர் நடைபெற்ற-ரழ்மலான் மாதத்தின் பதினேழாம் நாள் [5] ஈதுல் ஃபித்ருடைய-ஷவ்வால் மாதத்தின் முதல் நாள் (6 to 18) துல்ஹஜ்ஜு மாதத்தின் முதற் பதிமூன்று நாட்கள் [19] ஜும்ஆவுடைய நாள் ஆகியனவாகும்.

இவ்வாறாக, இமாமவர்களால் சுட்டிக் காட்டப்படும்-இறையருளிறங்கும்-இரவு, பகல்கள் ஆண்டு முழுவதுமே விரவிக் கிடக்கின்றனவானாலும், அவற்றில் மூன்று இரவுகள் மெய் நிலை கண்ட ஞான மகானின் கணிப்பிலும் இடம் பெற்றுள்ளவையே. அவர்கள் குறிப்பிடும் ஐந்து இர

வுகளில் முந்திய இரண்டும் அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு மட்டுமே அத்தாட்சிகள் வழங்கப்பட்ட இரவுகளாகும். பிந்திய மூன்று இரவுகளோ அடியார்களுக்கும் அருள் மயமானவை. அம்மூன்றும் ரஜபு, ஷஅபான், ரமழான் ஆகிய, ஒன்றையொன்று தொடர்ந்ததாய் வரும் மூன்று மாதங்களிலேயே அடுத்தடுத்து வருவதாலேயே அம்மூன்று மாதங்களும் அடியார்களுக்கு அல்லாஹ்வின் 'அருளிறங்கும் பருவ காலமாய்' விளங்குகின்றன.

விளைச்சலை அறுப்பதற்கு உழவர்களுக்கொரு பருவ காலம் இருப்பதே போல்,

தங்களின் முயற்சிகளின் பலனைத் திரட்டுவதற்கு வணிகர்களுக்கொரு பருவகாலம் இருப்பதே போல்தான்,

வணக்க வழிபாடுகளின் வாயிலாக அல்லாஹ்வின் அருளை அள்ளிச் சேர்க்கக் கருத்துடைய நல்லடியார்களுக்கொரு பருவ காலமாய் விளங்குபவை ரஜபு, ஷஅபான், ரமலான் மாதங்கள்.

தங்களின் பருவ காலத்தை எதிர் நோக்கிக் காத்திருக்கும் உழவர்கள், அது வந்திடுமானால் ஓய்ந்தமர்வதில்லை. விளை நிலங்களையே தங்களின் வாழ்விடங்களாக்கி, விளைந்தவற்றை அறுத்துக் கொணர்ந்து தங்கள் குடில்களுக்குள் அவற்றால் கோபுரங்களை எழுப்பிய பின்னரே நிம்மதி கொள்கிறார்கள்.

அதுபோன்றே வணிகர்களும்-உணவையும் உறக்கத்தையும் உதாசீனப்படுத்தி, கருமமே கண்ணெனக் காத்துப் புரண்டு, தங்களின் கணக்கேடுகளில் லாபத்துக்கான இலக்கங்களைக் கூட்டிக் கூட்டிப் பார்த்த பின்னரே பெருமூச்சை விடுத்து ஓய்கின்றனர்.

ஆனால், இம்மையின் விளைச்சல்களைச் சேர்ப்பதற்கும், லாபக் கணக்குகளைக் காண்பதற்கும் முழு அக்கறையைச் செலுத்தும் அதே சமயம் மறுமையின் தேவையைப் பற்றிய எண்ணத்தையே மனதில் கொள்ளாதிருப்பதை மனிதர்களின் துர்ப்பேறென்பதா? இல்லை, காலத்தின் கோலம் என்பதா?

உல்லாசத்தைச் சுகிப்பதற்கு மட்டுமேஉருவாக்கப்பட்ட நல்ல இவ்விம்மை வாழ்வு. கலீஃபா-அல்லாஹ்வின் பிரதிநிதியாகத் தெரிந்தெடுக்கப்பட்டு கண்ணியப்படுத்தப்பட்ட மனிதன், தான் பெற்ற கண்ணியத்தை புண்ணியமுடையதாக்கிக் கொள்ளத் தேவையான பயிற்சிகளை மேற்கொள்ளும் பாசறையே இது;

நிலையற்றதேயானாலும் தற்போது நமக்குக் கிடைத்திற்கும் ஒரு வாய்ப்பு இது;

நிலையானதைப் போன்று இது வழங்கும் தோற்றமே ஒரு மாயை. ஆனால் இம்மை வாழ்வே மாயையல்ல!

اَلدُّنْيَا مَزْرَعَةُ الْاٰخِرَةِ

நிலையான மறுமை வாழ்க்கைக்கான தேவைகளை அறுத்துச் சேர்க்கக் கிடைத்துள்ள விளைநிலமே இம்மை— என மறை தந்த மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறிப் போந்தார்கள்.

அவ்வாக்கினை அறிந்த நல்லோர்கள்—அதன் மாண்பினை உணர்ந்த முன்னோர்கள், அதன் விளைச்சலை அறுத்திடும் பருவகாலம் வந்திடுமானால் தங்களின் முரட்டுப் போர்வைகளை உதறி எழுந்து, மிருதுவான படுக்கைகளைச் சுருட்டி ஒதுக்கி, இனிய கனவுகளுக்கு விடை கூறி வணக்கதலங்களில் அடைக்கலம் புகுந்திட்டார்கள்; கண்ணீர் மழை

யில் நனைந்து தங்களின் பாவக் கறைகளைக் கழுவித் தீர்த் தார்கள்.

அல்லாஹ்வின் அருளிறங்கும் பருவ காலத்தை அடை யாளங் காட்டவே அண்ணலெம் பெருமானார் [ஸல்] அவர் கள் ரஜபுடைய மாதத்தை அல்லாஹ்வுடைய மாதமென வும், ஷஅபானை தங்களுடைய மாதமெனவும், ரமழ் லானை தங்களின் உம்மத்தினருடைய மாதமெனவும் கூறிச் சிறப்பித்தார்கள்.

ரஜப் அநீதங்களை விட்டொழிக்கும் மாதம், ஷஅபான் நேர்வழியின் பால் உறுதிப்பாடு கொள்ளும் மாதம், ரமழ் லான் உண்மையாளனாகத் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் மாதமாகும்;

ரஜப் பிழை பொறுக்கத் தேடும் மாதம், ஷஅபான் பற்றும் பாசமும் கொள்ளும் மாதம், ரமழ்லான் இறை நெருக்கத்தைத் தேடும் மாதம்;

ரஜப் கண்ணியமுடையது, ஷஅபான் ஊழியத்துக்குரி யது, ரமழ்லான் இறையருள் கொண்டது;

ரஜப் வணக்கத்துக்குண்டானது, ஷஅபான் உலகத் தொடர்புகளைத் தேவையற்றதாக ஒதுக்கும் மாதம், ரமழ் லான் நன்மைகளை அள்ளிச் சேர்க்கும் மாதம்;

ரஜபின் நற்செயல்களை அல்லாஹ் இரட்டிப்பாக்கி விடுகிறான், ஷஅபானில் தீமைகளை விலகச் செய்கிறான், ரமழ்லானில் தன் கிருபாவாரியை அள்ளிச் சொரிகிறான்;

ரஜப் நற்செயல்களின்பால் முந்திக் கொள்பவர்களின் மாதம், ஷஅபான் இடைநிலைப் பட்டவர்களின் மாதம், ரமழ்லான் பாவிகளின் பிழை பொறுக்கப்படும் மாதம் என் றெல்லாம் போற்றப்பட்ட திருவாய் மொழிகளை மெய் நிலை கண்ட மாமேதை ஹழ்லரத் கவ்ஃஸுல் அஅலம் [ரஹ்] அவர்கள் தங்களின் நூலில் கோர்த்தெழுகிறார்கள்,

ரஜப் துன்பங்களைத் தட்டி விலக்கும் மாதம், ஷஅபான் வணக்கம் புரியும் மாதம், ரமழ்லான் அருட்கொடைகளை எதிர் நோக்கும் மாதமாகும். துன்பங்களைத் தட்டி விலக்காமல், வணக்க வழிபாடுகளில் ஈடுபடாமல், அருட்கொடைகளைப் பற்றிய அக்கறையுமற்றிருப்பவன் வழிகேடர்களைச் சேர்ந்தவனாவான் என துன்னூன் மிஸ்ரீ [ரஹ்] அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ரஜப் மாதம் விதைக்கும் மாதமாகும், ஷஅபான் நீர் வளம் பாய்ச்சும் மாதமாகும், ரமழ்லான் விளைச்சலை அறுவடை செய்யும் மாதமாகும். ஒவ்வொரு மனிதரும் எதை விதைத்தாரோ அதனையே அறுப்பார். அவரவர் செய்த நன்மைகளுக்குரிய பலன்களையே பெறுவார். எதையுமே விதைக்காதவன் அறுவடையின் காலத்தில் வெட்கித்து நிற்கவே நேரிடும். அவனுடைய முடிவும் தீயதாகவே இருக்கும் என்றும் ஹழ்லரத் துன்னூன் மிஸ்ரீ [ரஹ்] கூறியுள்ளார்கள்.

ரமழ்லான் மாதத்தையடுத்து ரஜப், ஷஅபான் மாதங்கள் தவிர மற்றெந்த மாதங்களிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் முழுமையாக நோன்பிருந்ததில்லை என ஹழ்லரத் அபூ ஹுரைரா [ரலி] அவர்கள் அம்மாதங்களின் மகிமையைச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

நேர்வழி காட்டப் பெற்ற ஐந்தாம் கலீஃபாவாக மதிக்கப்படும் ஹழ்லரத் உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்கள் பஸரா நகரின் ஆளுநருக்கு எழுதியிருந்த ஒரு கடிதத்தில் [1] ரஜப் மாதம் முதலாம் இரவு [2] ஷஅபான் மாதம் பதினைந்தாம் இரவு [3] ரமழ்லான் மாதம் இருபத்து ஏழாம் இரவு [4] ஈதுல் ஃபித்ர்—ரமழ்லான்—ஈகைத்திருநாள் இரவு ஆகிய நான்கிலும் அவசியம் விழித்திருந்து வணங்குமாறும், அவ்விரவுகளில் அல்லாஹ் தன் அருளைப் பிரவாகமெடுக்கச் செய்வதாகவும் குறிப்பிட்டிருந்தார்கள்.



# ரஜப்

'புனித மாதங்கள்' என இறைவனின் திருமறையே புகழ்ந்திடும் நான்கு புண்ணிய மாதங்களில் ஒன்றே ரஜப் மாதம். துல்காஇதா, துல்ஹஜ் என ஆண்டின் இறுதியில் இரண்டு மாதங்களும் மறு ஆண்டின் துவக்கத்தில் வரும் முஹர்ரம் மாதமும் ஒன்றையொன்று தொட்டும் வரும் மற்ற மூன்று மாதங்களாகும். நான்கில் ஒன்றான ரஜப் மாதம் மட்டும் ஆண்டின் இடையே தனித்தே வருவதும் அதன் ஒரு தனிச்சிறப்பாகும்.

மகிமையும் கண்ணியமும் மிக்க ஷஅபான், ரமழான் மாதங்களுக்கு முன்னோடியாக வரும் ரஜபின் பிறையைக் கண்டதுமே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள்,

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْ رَجَبَ وَشَعْبَانَ وَبَلِّغْنَا رَمَضَانَ

''எங்கள் இறைவனே! இந்த ரஜப், ஷஅபான் மாதங்களில் உன் அருளை எங்களுக்குப் பெருகச் செய்து ரமழானை நாங்கள் அடையக் கிருபை செய்வாயாக'' என பிரார்த்திக்கத் துவங்கி விடுவார்கள்—என்று நபிமணித் தோழர் ஹழ்லரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

நபி நூஹ் (அலை) அவர்கள் தம் காலத்திலேற்பட்ட பிரளயத்திலிருந்து மீள ரஜப் மாதத்திலேயே மரக்கலமேறியதாகவும், ஆறு மாத காலப் பயணத்தை முடித்து அம்மரக்கலம் ஓர் ஆஷூராவுடைய நாளில் ஜூதி மலையில் தரை தட்டியதாகவும் வரலாறு கூறுகிறது. 'ரஜப் மாதம் மிகக் கண்ணியம் பொருந்திய மாதம். அம்மாதத்திய ஒரு நோன்பு ஓராண்டு கால நோன்புக்குச் சமமானது' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

'தர்ஜீப்' என்ற சொல்லிலிருந்து பிறந்த ரஜப் என்ற சொல்லுக்கு மரியாதைக்குரியது என்று பொருள். சிறப்பளிக்கப்பட்ட ஒரு மாதத்தை அரபிகள் 'ரஜப்த்த ஹாதஷ் ஷஹ்ர்' என குறிப்பிடுவார்கள். ஒரு காரியத்துக்காக தயாரிப்புகள் செய்வதற்கும் தர்ஜீப் என்று சொல்லப்படுவதுண்டு.

إِنَّهُ لَيُرَجَّبُ فِيهِ خَيْرٌ كَثِيرٌ لِشَعْبَانَ

ஷஅபான் மாதத்துக்கான பல நன்மைகள் முந்திய இம்மாதத்தில் சித்தப்படுத்தப்படுவதாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறியிருப்பதால் இது ரஜப் மாதம் என்று அழைக்கப்படுவதில் பொருளுண்டு.

ரஜப் என்ற அரபிச் சொல்லில் அடங்கியுள்ள ரே, ஜீம், பே என்ற மூன்று எழுத்துக்களையும் முன்னெழுத்துகளாகக் கொண்டு முறையே, ரஹ்மத் (கருணை), ஜூது (மன்னிப்பு) பர் (அருள்) என்ற மூன்று சொற்களைத் தெரிந்தெடுத்து, இம்மாதம் முழுவதும் அல்லாஹ்வின் கருணையும், மன்னிப்பும், அருளும் மற்றெந்த நாளிலும் சொரியப்படாத அளவு சொரியப்பட்ட வண்ணமாக உள்ளது—அதனாலேயே அது ரஜப் மாதம் என்றழைக்கப்படுகிறது என ஜீலானின் கோமான்—தீனுக்கு ஜீவனளித்த சீமான் குறிப்பிடுகிறார்கள்.

அந்தக் கருணை தண்டனையை முறியடிப்பது; அந்த மன்னிப்பு அணுவளவும் தயக்கமோ தாமதமோ கொள்ளாதது; அந்த அருள் அநீதியின் அடையாளமே காணப்படாதது எனவும் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

இந்த மாதத்தில் அல்லாஹ் தன் அடியார்கள் மீது கருணையைப் பொழிகின்றான்; நன்மைகளை அருள்கிறான்; மனிதன் இதற்கு முன் கண்டும் கேட்டுமிராத சன்மானங்

களை அவனுக்கென சித்தப்படுத்துகிறான் என ஞானிகள் நாயகம் எழுதுகிறார்கள்.

'ஷஹ்றுல்லாஹில் அஸம்' என அரபிகள் இஸ்லாத்துக்கு முந்திய காலத்திலும் இம்மாதத்தினைக் குறிப்பிடுவர். அஸம் என்ற அரபுச் சொல் செவிட்டுத் தன்மையை குறிப்பது. மனித உயிர்களுக்கு எந்த விலை மதிப்பும் காணாமல் கொலை கொள்ளை போன்ற அழிச்சாட்டியங்களிலேயே இன்பங் காணப்பட்டு வந்த அறியாமைக் காலத்திலேயே ரஜப் மாதம் பிறந்திடுமானால் அரபு மண்ணில் வாள்களின் மோதல்கள் ஒலிக்கா; அம்புகளின் சந்திப்புக் குரல்கள் செவியுறா; பெற்ற தன் தந்தையைக் கொன்றவனையும் பழி தீர்க்கத் தேடித் திரிபவன் அந்த தன் வைரியை எதிர் கண்ட நிலையிலும் காணாதவனைப் போலவே கடந்து செல்வான் இம்மாதத்தில். அத்தகைய அமைதி நிலவிய காரணத்தினால் இம்மாதம் 'அல்லாஹ்வின்-அமைதிநிறைந்த மாதம்-ஷஹ்றுல்லாஹில் அஸம்' என்று அழைக்கப்பட்டது.

தரிகெட்டுத் திரிந்த எத்தனையோ சமுதாயத்தினர் மீது பல்வேறு காலங்களில் அல்லாஹ்வின் வேதனைகள் இறக்கியுள்ளன. அவையனைத்தும் பிற மாதங்களிலேயே இறங்கினவேயொழிய ரஜப் மாதத்தில் அல்லாஹ்வின் வேதனை-வழிகெட்டோர் மீதும் கூட ஒருபோதும் இறங்கியதில்லை என்றெழுதப்படுகிறது.

மறுமை நாளிலும் இறைவனின் திருமுன் இந்த மாதம் மனிதர்களைப் பற்றிய எந்தக் குற்றச்சாட்டையும் கூறாது. 'அவர்களின் எந்தத் தீங்கான செய்தியையும் தான் கேட்கவில்லை' என்று கூறி தவிர்த்துக் கொள்ளும் என்று அறிவியல் மேதை ஷேக் அப்துல் ஹக் (ரஹ்) அவர்கள் தங்களின் நூலில் குறிப்பிடுகிறார்கள்.

இம்மாதத்தில் இறைவனின் கட்டளைப்படி பயணம் துவக்கிய ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்கள், மரக்கலத்தில் தாங்களும் நோன்பிருந்தார்கள்; தங்களோடிருந்தவர்களையும் நோன்பிருக்கச் செய்தார்கள். அல்லாஹ் அவர்களைப் பிரளயத்தில் மூழ்கி விடாதபடி காப்பாற்றினான்; பிரளயத்துக்குப் பின் பூமியை நிராகரிப்பை விட்டும் அழிச்சாட்டியத்தை விட்டும் பரிசுத்தப்படுத்தினான் என அண்ணலார் (ஸல்) அறிவித்ததாக நபிமணித் தோழர் ஹழ்ரத் ஸஹல் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இம்மாதத்தில் நோற்கப்படும் நோன்புகள் அந்நோன்பாளியின் பாவங்களை முழுமையாக அழித்து விடுகின்றன. 'உன் பாவங்கள் அழிந்து போயின, இனி நீ நன்மைகளைச் சேர்க்கத் துவங்கு' என அவருக்கு நன்மாராயம் கூறப்படுகிறது. அதனாலேயே இம்மாதத்துக்கு 'ஷஹ்ருல் முத் தஹ்ஹர்—பரிசுத்தப்படுத்தும் மாதம்' என்ற ஒரு பெயரும் உண்டு.

புனித மிக்க இம்மாதத்தில் வியாழன், வெள்ளி, சனி ஆகிய மூன்று நாட்களிலும் நோன்பிருப்பவருக்கு அல்லாஹ் தொள்ளாயிரம் ஆண்டுகள் வணக்கம் புரிந்ததற்கான நன்மைகளை அருள்கிறான் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் அருளியதாக ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

சுவனத்தில் ஒரு மாளிகையுண்டு, ரஜபு மாதத்தில் நோன்பிருந்தவர் மட்டுமே அதில் நுழைவார் எனவும் ஒரு சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளியதாகவும் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள்.

இம்மாதத்தில் நோற்கப்படும் நோன்புகளின் சிறப்பைப் பற்றி, அண்ணலார் (ஸல்) அவர்களின் நீண்ட ஓர் அருளுரையை விளக்கிய நபிமணித் தோழர் ஹழ்ரத் அபுத்

தர்தா (ரலி) அவர்கள், 'இம்மாதத்தில் நோன்பிருக்கும் வாலாயங் கொண்டிருந்தவரின் மரண சமயத்தில் இறங்கும் மரண தூதுவர் 'ஃபிர்தவ்ஸ்' எனப்படும் சுவனத்தின் நீரை அவருக்குப் புகட்டுவார். அதனால் அவரின் சிரமங்கள் பரிக ரிக்கப்பட்டு விடும். மிக எளிதாக அவரின் ஆன்மா பிரி யும், மண்ணறையில் அவர் நிம்மதி பெறுவார். 'கவ்ஃஸர்' நீர்த் தேக்கத்தருகிலும் அவர் இடம் பெறுவார். மண்ண றையிலிருந்து அவர் உயிர் பெற்றெழும்போதோ எழுபதி னாயிரம் விண்ணவர்கள் முத்தாலும் பவளத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட ஒட்டகைகளோடு பல்வேறான அணி கலன்களை ஏந்தி வந்து, ''இறைவனின் நேசரே! புறப்படுவீ ராக. எந்த உம் இரட்சகனை மகிழ்விக்க பகற்காலங்க ளெல்லாம் நீர் உம்மைத் தாகத்தால் வருத்திக் கொண் டீரோ, எந்த உம் இறைவனின் திருப்பொருத்தத்தைத் தேடி உம் உடலைப் பலஹீனப்படுத்திக் கொண்டீரோ அவனின் சந்திப்புக்கு விரைவீராக' என்று அவரை அழைப் பார். மறுமை நாளன்று அவர் மேலான நன்மைகளோடு 'அதன்' எனப்படும் சுவனத்தில் முதன்மையாக நுழைவார். அல்லாஹ் அவரைக் கொண்டு பொருத்தங் கொள்வான். அவனைக் கொண்டு அவரும் பொருத்தங் கொள்வார். அதுவே அவர் பெறும் மகத்தான சன்மானமாகும். அன்றாட தம் நோன்புகளோடு தம் வருவாய்க்கேற்றவாறு தர்மமும் செய்தவர் தங்குமிடத்தைப் பற்றி என் சொல்வேன்! அவர் தங்குமிடத்தைப் பற்றி என் சொல்வேன்!! அவர் தங்குமிடத் தைப் பற்றி என் சொல்வேன்!!! (என அண்ணலார் (ஸல்) அவர்களும் மும்முறை குறிப்பிட்டார்கள்.) அவர் பெறும் பேற்றை, படைப்புகள் அனைத்தும் கூடி கணிக்கவாரம் பித்தாலும் அதில் பத்திலொரு பாகத்தையும் கணிக்க முடி யாது—என குறிப்பிட்டார்கள்.

இஸ்லாத்தின் மூன்றாம் கலீஃபா ஸையதினா ஹழ்ரத் உஃஸ்மான் கனீ துன்னூரைன் (ரலி) அவர்கள் தங்கள் கிலா

ஃபத் காலத்தில், ரஜபு மாதம் பிறந்திடுமானால் தங்களின் 'குத்பா'ப் பேருரைகளில், 'மக்களே! இது அமைதி மாதமாகும். 'ஜக்காத்'—என்னும் அறம்—வழங்கும் மாதமாகும். கடன்பட்டுள்ளவர் தம் கடனைக் கொடுத்துமுடித்து எஞ்சிய தம் உடைமைகளுக்கான ஜக்காத்தை வழங்கிடுவாராக' என போதிப்பவர்களாக இருந்தார்கள்.

''அமைதி மாதமான — அல்லாஹ்வின் — ரஜபு மாதத்தில் முஸ்லிமான தன் உடன்பிறப்பின் கவலையை நீங்கச் செய்தவருக்கு அல்லாஹ், ஃபிர்தவ்ஸ் எனப்படும் சுவனத்தில் பார்வைக்கு மட்டுப்படாத அளவு விரிவுடைய பிரம்மாண்டமான மாளிகையை நிர்மாணித்தருள்வான். மக்களே! நீங்கள் ரஜபு மாதத்தைக் கண்ணியப்படுத்துங்கள். அல்லாஹ் உங்களின் தகுதியை ஆயிரம் மடங்கு உயரச் செய்வான்'' என்ற அருளுரையை ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ஜ்ஸுபைர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

''ரஜபு மாதம் அல்லாஹ்வுடைய மாதம், ஷஅபான் என்னுடைய மாதம், ரமழ்லான் என் சமுதாயத்தவர்களின் மாதம்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவித்த போது, ''பெருமானே! அல்லாஹ்வுடைய மாதம் என்பதன் தாத்பரியம் என்ன?'' என்று வினவப்பட்டது. அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அம்மாதத்தில் பிரத்தியேகமாக மன்னிப்பளிக்கப்படுகிறது. இரத்தக் களரிகளை விட்டும் பாதுகாக்கப்படுகிறது; அம்மாதத்தில் அல்லாஹ் தன் தூதர்களின் இறைஞ்சுதல்களை அங்கீகரித்தான்; தன் அடியார்களுக்கு அவர்களின் எதிரிகளிடமிருந்து பாதுகாப்பளித்தான். அம்மாதத்தில் நோன்பிருப்பவருக்கென, அல்லாஹ் தன்மீது மூன்று விஷயங்களைக் கடமையாக்கிக் கொள்கிறான். முந்திய அவரின் பாவங்களனைத்தையும் மன்னித்தல், பிந்திய வாழ்நாளில் ஏற்பட்டுவிடக் கூடிய பாவங்களை விட்டும்

அவரைப் பாதுகாத்தல், மறுமை நாளன்று ஏற்படக்கூடிய பயங்கர தாகத்தை அவருக்கு தீர்த்து வைத்தல் ஆகியவை அம்மூன்று விஷயங்களாகும்'' என்றார்கள். அதனைச் செவி யுற்று நின்ற ஒரு முதியவர், ''அல்லாஹ்வின் தூதரவர் களே! என் முதுமையின் பலஹீனத்தால், நான் அம்மாதம் முழுவதும் நோன்பிருக்கத் தங்கடப்பட்டவனாக இருக்கின் றேன்'' என கவலையுற்றார். அண்ணலார் (ஸல்) அவர்கள் அவரை நோக்கி ''அதன் முந்திய நாளிலும், (பதினைந்தாம்) மத்திய நாளிலும், இறுதி நாளிலும் நீர் நோன்பிருப்பீ ராக. முழு மாதமும் நோன்பிருந்த பலன் உமக்குக் கிடைக்கும். ஆனால் ரஜபு மாதத்தின் முதலாம் வெள்ளிக் கிழமை இரவைத் தவற விட்டுவிட வேண்டாம். விண்ண வர் அவ்விரவை 'லைலத்துர் ரகாஇப்' என்று கூறுகின்றனர். விண்ணிலும் மண்ணிலும் சஞ்சரிக்கும் அத்தனை விண்ண வர்களும் அவ்விரவின் முந்திய மூன்றிலொரு பகுதி கழிந் தவுடன் கஅபாவைச் சூழ குழுமி நின்று ரஜபு மாதத்தில் நோன்பிருந்தவர்களின் பிழைகள் பொறுக்கப்பட இறைவ னிடம் வேண்டுதல் புரிகிறார்கள். அல்லாஹ் அவர்களின் வேண்டுதல்களை அங்கீகரிக்கிறான்'' என்றருளியதாக ஹழ்ல ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ரஜபு மாதத்தில் முதல் வியாழக்கிழமையன்று நோன்பு பிருந்து அன்று மாலை (மக்ரிபு), இரவு (இஷா) தொழுகை களுக்கு இடைப்பட்ட நேரத்தில் ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஹம்து ஸூராவுக்குப் பின் (97-ம்) கத்ருடைய ஸூராவை மூன்று முறையும் (112-ம்) குல்ஹுவல்லாஹு ஸூரா வைப் பனிரண்டு முறையும் ஓதி இரண்டிரண்டு ரக்அத்து களாகப் பனிரண்டு ரக்அத்துகள் தொழுது முடித்து ''எங்கள் இறைவா! எங்களின் தலைவரும், (ஓதாமலே உணர்ந்த) 'உம்மி நபி'யுமாகிய முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்களின் குடும்பத்தவர்களுக்கும் நல்வாழ்த்துகள் கூறி சாந்தியையும் இறக்கியருள்'' என்று பொருள்படும்,

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ النَّبِيِّ الْاُمِّيِّ وَعَلٰى اٰلِهٖ وَسَلِّمْ

அல்லாஹும்ம ஸல்லி அலா ஸையிதினா முஹம்மதினின் னபிய்யில் உம்மிய்யி வஅலா ஆலிஹி வஸல்லிம் என்ற ஸலவாத்தை எழுபது முறை ஓதி தரையில் சிரம் பதித்து (ஸஜ்தாவில்),

سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّنَا وَرَبُّ الْمَلٰٓئِكَةِ وَالرُّوحِ

ஸுப்பூஹுன் குத்தூஸுன் ரப்புனா வரப்புல் மலாஇகத்தி வர்ருஹ் என எழுபது முறை ஓதி, நிமிர்ந்து அமர்ந்து,

رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَتَجَاوَزْ عَمَّا تَعْلَمُ فَاِنَّكَ اَنْتَ الْعَزِيزُ الْاَعْظَمُ

ரப்பி'க்ஃபிர் வர்ஹம் வதஜாவஜ்ஸ் அம்மா தஅலம் ஃபஇன்னக்க அன்த்தல் அஸீஸுல் அஅளம் என்று எழுபது முறை ஓதி மீண்டும் ஸஜ்தா செய்து தம் கோரிக்கைகளை ஒருவர் சமர்ப்பிப்பாராகில் அல்லாஹ் அவரின் கோரிக்கைகளை அங்கீகரித்தருள்வான்—என அறிவித்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள்,

''என் ஆன்மாவைத் தன் வசம் கொண்டுள்ள அந்த வல்லமையின் மீது சத்தியமாக அவ்விதம் தொழுவதைத் தம் வாலாயமாக்கிக் கொண்டவரின் பாவங்களனைத்தையும் அல்லாஹ் மன்னித்தருள்வான்—அவை கடலின் அலைகளைப் போல் பெருக்கெடுத்திருந்தாலும் சரி; மலைகளைப் போல் வலுப்பெற்றிருந்தாலும் சரி; எண்ணிக்கையில் மரங்களின் இலைகளுக்கொப்பானவையாக இருந்தாலும் சரியே. மறுமை நாளன்று அல்லாஹ்வின் திருமுன் தம்முடைய குடும்பத்தைச் சார்ந்த எழுநூறு பேர்க்குப் பரிந்துரைக்க அவர் வாய்ப்பளிக்கப்படுவார். மரணித்த பின் அவர் தம்

மண்ணறையில் முதல் இரவில், ''அன்புக்குரியவரே! உமக்குச் சோபனம். எல்லாச் சிரமங்களை விட்டும் துயரங்களை விட்டும் நீர் பாதுகாப்பாக இருப்பீர்.'' என்ற இனிய குரலைக் கேட்பார்; அக்குரலுக்குரிய அழகிய தோற்றப் பொலிவையும் அவர் காண்பார். ''இத்தகைய அழகிய தோற்றத்தை நான் கண்டதே இல்லையே! இத்தகைய இனிய குரலை நான் கேட்டதேயில்லையே! இத்தகைய மேலான சுகந்தத்தை நான் முகர்ந்ததேயில்லையே! இத்தனைக்கும் உரிய நீ யார்?—என வியப்புடன் கேட்பாரவர். ''அன்பரே! குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட சமயத்தில் நீர் தொழுது வந்த அந்தத் தொழுகையின் பலனே நான்; இன்று உம் தனிமையைத் தவிர்க்க, உம் அச்சத்தை விலக்க, உம் தேட்டத்தை நிறைவேற்ற வந்துள்ளேன். எக்காளம் ஊதப்படும் நாளில் மறுமைப் பெருவெளியிலும் உமக்கு நான் நிழல் பிடிப்பேன். உம் இறைவனின் திருமுன் உம்முடைய நற் செயல்கள் உம்மை நட்டமடைய ஒரு போதும் விட்டு விட மாட்டா என்பதை எண்ணி நீர் மகிழ்வீராக'' என அவர் வாழ்த்தப்பெறுவார் என அருளினார்கள்—என்று ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

''அடியான் தன்னிடத்தில் வேண்டுதல் புரிய ஏந்தும் கரங்களை வெறுமையாய்த் திருப்பிவிட அல்லாஹ் வெட்கமடைகிறான். எனவே அவன் உடனடியாகவோ தாமதமாகவோ அதனை நிறைவேற்றியே தருகிறான் அல்லது அவ்வடியானின் மறுமைத் தேவைக்காக நிர்ணயப்படுத்தி விடுகிறான்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் அருட்பெரும் பேறாய் அவனி போந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அன்னை ஆமினா அம்மையாரின் கோளறையில் கருவாய் உருக் கொண்ட இரவும் ரஜபு மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமை இரவே எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

''ரஜபு மாதத்தில் ஒரேயொரு நோன்பை நோற்றவரும் கூட — மறுமைப் பெருவாழ்வில் நாட்டமுடையவராயின் — இறைவனின் திருப்பொருத்தத்தைப் பெற்று சுவனஞ் சேர்ந் திடுவார்'' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அருளியதாக ஹழ்லரத் அபூ ஸஈதல் குத்ரீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

சுவனத்தில் ஒரு நீரோடையுண்டு. அதன் பெயரே 'ரஜப்' ஆகும். அதன் நிறம் பாலைவிட வெண்மையுடைய தாயிருக்கும். அதன் சுவை தேனை விட இனிமையுடைய தாயிருக்கும். ரஜபு மாதத்தில் ஒரேயொரு நாள் நோன்பி ருந்தவரையுங்கூட அல்லாஹ் அந்நீரோடையிலிருந்து பருகச் செய்வான்—என பெருமானார் (ஸல்) அவர்கள் அரு ளக் கேட்டு ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர் கள் அறிவித்துள்ளார்கள்.

''ரஜபு மாதம் முதல் நாள் வைக்கப்படும் நோன்பினு டைய பலன் அம்மாதம் முழுமையாக வைக்கப்படும் நோன் புகளின் மொத்தப் பலனுக்குச் சமமானதாயிருக்கும். இம் மாதத்தின் ஏழு நாட்கள் நோன்பிருந்தவருக்கு நரகின் ஏழுவாசல்களும் அடைக்கப்பட்டு போகும். எட்டு நாட் கள் நோன்பிருந்தவருக்கு சுவனத்தின் எட்டு வாசல்களும் திறக்கப்பட்டு விடும். பத்து நாட்கள் நோன்பிருந்தவரின் தீமைகளை அல்லாஹ் நன்மைகளைக் கொண்டு மாற்றி விடுவான். பதினெட்டு நாட்கள் நோன்பிருந்தவரை நோக்கி 'ஓ நல்லடியாரே! நிச்சயமாக நீர் மன்னிக்கப் பட்டு விட்டீர். இனி நன்மைகளைச்சேகரிக்கத் துவங்குவீர்' என விண்ணிலிருந்து நன்மாராயம் கூறப்படும்—என அண்ண லெம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் ஓர் அறிவிப்பும் காணப் படுகின்றது.

## சங்கை நிறைந்த மிஅராஜ் இரவு

ரஜபு மாதத்தில் ஓர் இரவு உள்ளது. அந்த இரவில் தொழுது வணங்கி அடுத்த பகலில் நோன்பிருந்தவருக்கு அல்லாஹ் ஒரு நூறாண்டு காலம் இரவெல்லாம் விழித்திருந்து வணங்கி பகலெல்லாம் நோன்பிருந்தற்குண்டான நன்மைகளுக்கொப்ப அருள்புரிவான். அந்த இரவுக்குப் பின் அம்மாதத்தில் (28, 29, 30 ஆகிய) மூன்று இரவுகளே மிஞ்சியிருக்கும் — என நபிபெருமான் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹழ்லரத் அபூ ஸலமா, ஸல்மான் ஃபார்ஸீ, அபூ ஹுரைரா (ரலி) ஆகிய நாயகத் தோழர்கள் அறிவித்துள்ளார்கள்.

ரஜபு மாதத்தின் இருபத்து ஏழாம் இரவாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் அடையாளம் காட்டப்பட்டுள்ள இரவே மிஅராஜுடைய இரவாகும்; இறைவனின் அழைப்பை எத்திவைத்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை விண்ணுலகப் பயணம் செய்ய ஹழ்லரத் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் அழைத்துச் சென்ற சங்கையான இரவாகும். மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் மக்காவில் உள்ள மஸ்ஜிதுல் ஹராம்—புனிதப்—பள்ளியிலிருந்து புறப்பட்டுச் சென்று 'பைத்துல் முகத்தஸ்'ஸிலுள்ள 'மஸ்ஜிதுல் அக்ஸா'வில் காத்திருந்த முந்திய நபிமார்களுக்கெல்லாம் முன்னிலை வகித்து தொழுகை நடாத்தி, ஏழு வானங்களையும் கடந்து, 'ஸித்ரத்துல் முனத்தஹா'வெனப்படும் சஞ்சார எல்லைக்கப்பால் தங்களின் இறைவனோடு,

فَكَانَ قَابَ قَوْسَيْنِ أَوْ أَدْنٰى ۝

''(வளைந்த) வில்லின் இரு முனைகளைப் போல் அல்லது அதனினும் நெருக்கமாக'' (திருக்குர்ஆன்—53 : 09) இருந்து உரையாடிப் பிரிந்து ஒப்பற்ற இரவாகும். எந்தக் கண்களும் கண்டிராத எந்தச் செவிகளும் கேட்டிராத

எந்த உணர்வுக்குமே மட்டுப்படாத இறைவனின் அநேக அத்தாட்சிகளை அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் காணப் பெற்ற அந்த இரவை,

لِنُرِيَهُ مِنْ آيَاتِنَا

''நம்முடைய திருஷ்டாந்தங்களை அவருக்குக் காட்டவே'' என சங்கைப்படுத்துகிறது வானமாமறை —(17 : 01)

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், தாங்கள் படுத்திருந்த விரிப்பின் சூடு ஆறுமுன்னதாக விண்ணெல்லாம் தங்களைப் பயணம் செய்ய வைத்து வீடு சேர்த்த தங்களின் இறைவனின் மகத்தான ஆற்றலை அந்த இரவில் கண்டார்கள். விண்ணுலகில் அவர்கள் சுவனத்தைக் கண்டார்கள்; நரகத்தையும் கண்டார்கள்; நல்லோர் பெற்றுள்ள பேறுகளையும் கண்டார்கள்; தீயோர் படும் வேதனைகளையும் கண்டார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக தங்கள் இறைவனின் 'லிக்கா' வென்னும் திருக்காட்சியையே கண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், ''என் இறைவனே! எனக்கு மட்டும்தானா இந்தப் பேறு, என் 'உம்மத்'துகளுக்கில்லையா?'' என கனிந்து நின்றார்கள்.

''உண்டு. என்னைக் காணும் 'மிஅராஜ்' எனப்படும் இந்தப் பேற்றினை உம்முடைய உம்மத்துகள் தங்களின் தொழுகையின்போது பெறுவார்கள்—என அல்லாஹ் அருளக் கேட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் மகிழ்ந்தார்கள்.

இறைவனின் அன்புப் பெருக்காக, தொழுகை—'முஃமின்களுக்கு மிஅராஜ்'—அருளப்பட்டது அந்தப் புனித இரவில். நாளொன்றுக்கு ஐம்பது வேளை என நிர்ணயிக்கப்

பட்ட தொழுகை பெருமானார் (ஸல்) அவர்கள் வேண்டிக் கொண்டபடி படிப்படியாகக் குறைக்கப்பட்டு ஐந்து வேளை யாக்கப்பட்டது. நன்மைகளோ ஐம்பது வேளைகளுக்குண் டானதே; குறைக்கப்படமாட்டாது என அருளப்பட்டது. தீமைகள் செயல் வடிவம் பெறாதவரை எண்ண ஊசாட் டங்கள் மட்டுமே குற்றம் பிடிக்கப்படமாட்டா, செயல் வடிவம் பெற்றாலோ செய்த பாவத்துக்கு மேல் அணுவள வும் அநீதியிழைக்கப்படமாட்டாது. நன்மையான காரியங் களை நினைத்தாலே போதும் செய்து முடித்தற்கான நன்மை எழுதப்படும். எண்ணியபடி செயல்படுத்தி முடித் தாலோ அதற்குரிய பலன் பதின்மடங்காகப் பெருக்கித் தரப் படும்—என்றெல்லாம் இறைவனின் கருணாமாரி பெருக் கெடுத்த அந்த இரவை தங்களின் வணக்க வழிபாடுகளால் வளம்பெறச் செய்வதை வாலாயமாக்கி வந்தனர் சான்றோர்.

தீனென்னும் இஸ்லாமிய மணிமண்டபத்தைத் தாங்கும் தூணாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் தொழு கையைக் காட்டினார்கள். அதனை நிலைப்படுத்தியவர் தீனை நிலைப்படுத்தினார். அதனை விட்டவன் தன் மார்க் கத்தையே தகர்த்தெறிந்தான் என்பது அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளெச்சரிக்கை. இது கடமையாக்கப்பட்ட தொழுகைகளுக்கே என வாதித்து நஃபிலான தொழுகை களின்பால் அக்கறை காட்டாதிருப்பது விவேகமல்ல. கடமையாக்கப்பட்ட ஐங்காலத் தொழுகைகளையும் மறந்து பொடுபோக்காகத் திரிந்தலையும் பரிதாபத்துக்குரியவர் களுக்கு அவர்களைச் சந்திக்கக் காத்திருக்கும் முடிவை நினைவூட்டவும் இந்த வாலாயத்தை விடாதிருந்தனர் ஆன்றோர்.

உலமாக்களின் நல்லுரைகளை தப்பித் தவறிச் செவி யேற்று ஏதோ ஓர் அச்சவயப்பட்டு இத்தகைய ஒரு குறிப்

பிட்ட நாளிலேயே பள்ளிகளில் நுழைந்துவிடும் பாமரர்களும் கூட கடமையைத் தவறவிடாது ஐங்காலமும் தொழும் கனவான்கள் கூட்டத்தை அங்கே கண்டால் தங்களின் பொடுபோக்குத் தனத்தை நினைந்து வெட்கமுற மாட்டார்களா? வேதனைப்பட்டு அவர்கள் வழி திருந்த உள்ள ஒரு வாய்ப்பை எகத்தாளமான கருத்துகளை வெளிப்படுத்தி தகர்த்தெறிய முற்படுவதும் அறிவுடமையாகுமா? எனவே அல்லாஹ்வின் அருளிறங்கும் இத்தகைய புனிதமான இரவுகளில் பள்ளிகளை விளக்குகளால் ஒளி பெற செய்வதோடன்றி, ஐங்காலமும் தவறாது "ஒழ்லு" செய்து ஒளி பெற்ற முகங்களாலும் பொலிவு பெறச் செய்ய வேண்டும்.

அந்த இரவில் விழித்திருந்து வணக்கம் புரிபவர் ஒரு நூறாண்டு காலம் வணக்கம் புரிந்த பலனைப் பெறுவார் என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அருளியுள்ளதாக அறிவுலக மேதை இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் தங்கள் 'இஹ்யா'வில் குறிப்பிடுகிறார்கள். அந்த இரவில் புரியவேண்டிய ஒரு வணக்க முறையையும் இமாமவர்கள் தங்களின் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

இரண்டிரண்டு ரக்அத்துகளாக பனிரெண்டு ரக்அத்துகள் தொழுது முடித்து,

سُبْحَانَ اللّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاللّٰهُ اَكْبَرُ

'ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' என ஒரு நூறு முறையும்,

اَسْتَغْفِرُ اللّٰهَ رَبِّيْ مِنْ كُلِّ ذَنْبٍ وَّاَتُوْبُ اِلَيْهِ

'அஸ்தGஃபிருல்லாஹி ரப்பீ மின் குல்லி தம்பின் வஅ[த்]தூபு இலைஹி' என ஒரு நூறு முறையும் ஓதும்

படியாக இமாமவர்கள் கற்றுத் தந்துள்ள வழி முறை பாமரர்களும் பின்பற்ற மிக எளிதான ஒன்றாகும்.

உலமாக்களும் குருமார்களும் பொது மக்களுடையவும் தங்களின் சீடர்களுடையவும் அவ்வப்போதைய மனப்பக்குவத்திற்கேற்றபடி எத்தனையோ வெவ்வேறான முறைகளில் நஃபிலாகத் தொழ கற்பித்துள்ளார்கள் என்றாலும், நெருக்கடி மிக்க இன்றைய உலகில் கடமையான தொழுகைகளை தெரிந்தோ தெரியாமலோ தவறவிட்டிருப்பவர்கள் 'கழ்லா'வாகவேனும் அவற்றை நிறைவேற்றி முடிக்கக் கிடைத்துள்ள அரிய வாய்ப்பாக இந்த இரவுகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். தவறிய தொழுகைகள் கணக்கும் நம்மிடம் இருக்க முடியாது. எந்த அளவுக்கு முடிகின்றதோ அந்த அளவுக்கு ஐங்காலத் தொழுகைகளையும் மீட்டுத் தொழலாம்.

தொழுகை முடித்து இறைவனைப் புகழ்ந்து துதித்து தங்களின் பிழை பொறுக்கப்பட வழுத்தியபின் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்தைப் பொழியத் தவறிவிடலாகாது. இவ்வுலகமும் உலக பாக்கியங்களும் மறுமைப் பெரு வாழ்வும் அதனை ஈட்டத் தேவையான மார்க்கமும் நமக்கு அருளப்பட முழு முதற்காரணமான அம்முத்தொளிவை மறந்த நன்றியற்றவர்களாக நாம் ஆக வேண்டாம். எனவே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மீது விடியும் வரை நாம் ஸலவாத்தையும் ஸலாமையும் ஓதி முடிக்கலாம்.

மறு நாளைய பகலும் சிறப்புக்குரியதே என்பதை உணர்த்த ஒரு சம்பவத்தை இமாம் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்:

ரஜபு மாதம் இருபத்து ஏழாம் நாளில் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பள்ளியில்—இஉதிகாஃப்—இருந்து மவுனத் தவம் புரிவதைத் தம் வழக்க மாக்கிக் கொண்டிருந்தார்கள். அன்று உச்சிப் பகல் (லுஹர்) தொழுகைக்குப் பின் அவர்கள் மேலதிகமாக (நஃபில்) தொழத் துவங்கி விடுவார்கள். அச்சமயம் அவர்கள் ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஹம்து ஸூராவையடுத்து (97-ம்) கத்ருடைய ஸூராவை மூன்று முறையும் (112-ம்) குல்ஹுவல்லாஹு ஸூராவை ஐம்பது முறையும் ஓதி நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். பின்னர் சாயுங்கால (அஸர்) தொழுகை வரை இறைஞ்சுதல்களில் ஆழ்ந்து விடுவார்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வழக்கம் இதுவே என அவர்கள் கூறுவார்கள் என்று ஹழ்லரத் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.



# ஷஅபான்

وَرَبُّكَ يَخْلُقُ مَا يَشَآءُ وَيَخْتَارُ

("நபியே!) உம் இறைவன் தான் விரும்பியவாறு சிருஷ்டித்து தான் விரும்பியபடியே தெரிந்தெடுக்கிறான்.'' என்கிறது வேதமாமறை. (28 : 68)

அல்லாஹ் ஒவ்வொரு வகையிலும் நான்கைத் தெரிந்தெடுத்தான், அவற்றுள் ஒன்றை முற்படுத்தினான். விண்ணவர்களில் ஜிப்ரஈல், மிக்காஈல், இஸ்ராஃபீல், இஸ்ராயீல் (அலை) ஆகிய நால்வரைத் தெரிந்தெடுத்தான். அவர்களில் ஹழ்லரத் ஜிப்ரஈல் (அலை) அவர்களை முற்படுத்தினான். நபிமார்களில் இப்ராஹீம், மூஸா, ஈஸா (அலை) ஆகியோரையும், முஹம்மத் (ஸல்) அவர்களையும் தெரிந்தெடுத்தான். அவர்களில் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்களை மேலாக்கினான். ஸஹாபாக்களில் ஹழ்லரத் அபூ பக்கர், உமர், உஃஸ்மான், அலீ (ரலி) ஆகிய நால்வரைத் தெரிந்தெடுத்தான். அவர்களில் ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்களை முதன்மையாக்கினான். பள்ளிவாசல்களில் மக்காவில் உள்ள மஸ்ஜிதுல் ஹராமையும், மதீனாவில் உள்ள மஸ்ஜிதுன் னபவீயையும், பைத்துல் முகத்தஸிலுள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவையும், ஸினாய் மலையில் உள்ள மஸ்ஜிதையும் தெரிந்தெடுத்தான். அவற்றுள் மஸ்ஜிதுல் ஹராமை மேம்படுத்தினான். நாட்களில் நோன்புப் பெருநாளையும், ஹஜ்ஜுப் பெருநாளையும், அரஃபாவுடைய நாளையும், ஆஷூராவுடைய நாளையும் தெரிந்தெடுத்தான். அவற்றுள் அரஃபாவுடைய நாளைச் சிறப்பாக்கினான். இரவுகளில் பராஅத் இரவையும், கத்ருடைய இரவையும், வெள்ளி இரவையும், பெருநாள் இரவையும் உவந்தான். அவற்றுள் கத்ருடைய இரவை உயர்வடையச் செய்தான். மாதங்களில்

ரஜப், ஷஅபான், ரமழ்லான், முஹர்ரம் ஆகிய மாதங்களைத் தெரிந்தெடுத்தான். அவற்றுள் ஷஅபானைத் தன் தூதரின் மாதமாக்கிக் கண்ணியப்படுத்தினான்—என மாத வர்க்கரசர் முஹியத்தீன் ஆண்டகையவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ரஜப், ரமழ்லான் மாதங்களுக்கிடைப்பட்டுள்ள ஷஅபானைப் பற்றி மக்கள் பாராமுகமாக இருக்கிறார்கள். ஆனால் அம்மாதத்தில்தான் அடியார்களின் நடவடிக்கைகள் அகிலங்களின் அதிபதியின் முன்னிலையில் சமர்ப்பிக்கப்படுகின்றன. அல்லாஹ்வின் திருமுன் என்னுடைய நடவடிக்கைகள் நான் நோன்புடனிருக்கும் நிலையில் சமர்ப்பிக்கப்படுவதையே நான் விரும்புகிறேன் — என பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

மற்ற மாதங்களின் மீது ரஜபு மாதத்துக்குள்ள சிறப்பும், பெருமையும், மற்ற வேதங்களின் மீது குர்ஆன் பெற்றுள்ள சிறப்பையும் பெருமையும் போன்றனவாகும். மற்ற மாதங்களிடையே ஷஅபானுக்குரிய சங்கை எல்லா நபிமார்களுக்கிடையிலும் எனக்குள்ள சங்கையைப் போன்றதாகும். மற்ற மாதங்களுக்கிடையே ரமழ்லானுக்குரிய உயர்வு அகிலங்களனைத்தின் மீதும் அல்லாஹ்வுக்குள்ள உயர்வைப் போன்றதாகும் — என அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் அருளியதாக ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களின் தோழர்கள் ஷஅபான் மாதத்தின் பிறையைக் கண்டதுமே திருக்குர்ஆனைப் பாராயணம் செய்வதில் மூழ்கிவிடுவார்கள். ஏழைகளும் எளியவர்களும்நோன்பிருக்க வாய்ப்புண்டாக்கும்வகையில் முஸ்லிம்கள் தங்களின் 'ஜக்காத்'தைக் கணக்கிட்டுப் பங்கிடத் துவங்கி விடுவார்கள். நீதிபதிகள் கைதிகளின் விசாரணையை முடித்து தண்டனைக்குரியவர்களைத் தவிர மற்றவர்களை

விடுதலை செய்து விடுவார்கள். வணிகர்கள் தங்களின் நிலுவைகளை வசூலித்து கொடுப்பல்களைத் தீர்த்து விடுவார்கள். ரமழ்லானின் பிறை தோன்றிவிடுமானால் உலகாயதப் பணிகளிலிருந்து விடுபட்டு அனைவரும் வழிபாட்டில் ஆழ்ந்து விடுவார்கள் எனவும் ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

இம்மாதத்தில் நன்மையின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. அருள்மாரி பொழியப்படுகின்றது. பிழைகள் பொறுக்கப்படுகின்றன. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்குச் சொந்தமானதென கண்ணியம் பெற்ற இம்மாதத்தில் அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் அதிகமாகப் பொழியப்படுகிறது. ஸலவாத்தையும் ஸலாமையும் சமர்ப்பிக்க இது மிகச் சொந்தமான மாதமென ஞானிகளின் நாயகம் ஹழ்லரத் அப்துல் காதர் ஆண்டகையவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

إِنَّ اللَّهَ وَمَلَٰٓئِكَتَهُۥ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ يَٰٓأَيُّهَا الَّذِينَ
ءَامَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا ۝

''நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துச் சொல்லுகிறார்கள். (ஆகவே) விசுவாசிகளே! நீங்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக் கொண்டிருங்கள்—என வலியுறுத்துகிறது வான்மறை. (33 : 56)

''ஒருமுறை என் மீது ஸலவாத்துச் சொன்னவருக்கு அல்லாஹ் பத்துமுறை ஸலவாத்து கூறுகிறான் — என பெருமானார் (ஸல்) அவர்களே கூறியுள்ளார்கள்.

எனவே அறிவுடைய விசுவாசிகள் தங்களின் மறதியின் காரணமாக இம்மாதத்தைத் தவறவிட்டிடலாகாது. ரமழ்லானை வரவேற்க இப்போதே தங்களைச் சித்தப்படுத்திக்

கொள்ளத் துவங்கிட வேண்டும். கழிந்து போன பாவங் களுக்குப் பிழை பொறுக்கத் தேடி பச்சாதாபத்தால் தங்க ளைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ள முனைய வேண்டும். அல் லாஹ்வின் திருமுன் இந்த ஷஅபான் மாதத்திலேயே கெஞ்சி மன்றாட வேண்டும். மனதைச் சூழ்ந்துள்ள மாசுகள் விலக நோய்களை விட்டும் இதயம் நிவாரணம் பெற அல்லாஹ் வின் சன்னிதானத்தில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வஸீலா வென்னும் பரிவுரையைத் தேடிக் கொள்ள வேண்டும்.

இதில் தயக்கமோ தாமதமோ கொள்வது அறிவுடமை யல்ல. நாளைக்கென இதனை ஒத்தி வைப்பது சரியல்ல. ஏனெனில் நாளை என்பது நம்பிக்கையில் உள்ளதே தவிர நிச்சயமானதல்ல.

நாட்கள் மூன்று : நேற்று—கழிந்து போனது. அது மீண் டும் வரப்போவதில்லை. நாளை—நம்பிக்கையில் உள்ளது; வந்தே தீரப்போவதல்ல. செயல்படக் கிடைத்துள்ள ஒன்றே ஒன்று இன்றுதான்.

கழிந்துபோன 'நேற்று' நமக்கு ஒரு படிப்பினை. வரப் போகும் நாளை வெறும் மனக்கோட்டையே. கிடைக்கப் பெற்றுள்ள 'இன்று' நமக்கோர் அரும் வாய்ப்பு. அஃதே போல்,

மாதங்களில் ரஜபு கழிந்து விட்டது. ரமழ்லான் எதிர் பார்க்கப்படுவது. அது வந்து சேரும் வரை நாம் உயிர் வாழப் போவது நிச்சயமானதில்லை. எனவே இடையில் கிடைத்துள்ள ஷஅபானை அரிய வாய்ப்பாக மதித்து அதில் வணக்க வழிபாடுகளை மேற்கொள்ளல் வேண்டும்.

''ஷஅபான் மாதம் வந்திடுமானால் அண்ணலார் (ஸல்) அவர்கள் தொடர்ந்து பல நாட்களுக்கு நோன்பிருப்பார்கள்.

ரமழ்லானைத்தவிர்த்தமற்றெந்த மாதங்களிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஷஅபானில் நோற்றது போன்று அதிகமான நோன்புகளை நோற்றதில்லை. ஷஅபானில் நோன்பிருப்பதை அண்ணலார் (ஸல்) அவர்கள் அதிகம் உவந்தார்கள். "அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்கள் ஷஅபான் மாதத்தில் நோன்பிருக்கக் காரணம் என்ன" என்றுநான் கேட்டபோது, "அவ்வாண்டின் பிந்திய நாட்களில் மரணிக்கவேண்டியவர்களின் பெயர்கள்—மலக்குல் மவுத் — உயிர் வாங்கும் வானவரிடம் இம்மாதத்திலேயே ஒப்படைக்கப் படுகின்றன. அவ்வாறாக என் பெயரும் நான் நோன்புடனிருக்கும் நிலையிலேயே ஒப்படைக்கப்படும் என்பதற்காகவே இம்மாதத்தில் நான் நோன்பிருக்கிறேன்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளினார்கள் — என அன்னை ஆயிஷா நாயகியார் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

"ரமழ்லான் மாத நோன்புகளையல்லாது ஷஅபான் மாதத்தில் வைப்பதைப் போல அதிகமான நோன்புகளை அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மற்றெந்த மாதங்களிலும் வைப்பதில்லை. காரணம் அம்மாதத்தில்தான் மரணிப்பவர்களின் பெயர்கள் உயிர் வாழ்பவர்களின் பட்டியலிருந்து மரணிப்பவர்களின் பட்டியலுக்கு மாற்றப்படுகின்றன. ஒரு மனிதன் பயணத்தில் ஈடுபட்டிருப்பான். அவனின் பெயரோ மரணிப்பவர்களின் பட்டியலில் சேர்க்கப்பட்டுக் கொண்டிருக்கும் — என அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

ஷஅபான் மாதம் ரமழ்லான் மாதத்துக்கு முன்னோடியாக இருப்பதாலும் அது அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு உவப்பானதாக இருந்தது என்றும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

ஷஅபானின் நோன்புகள் ரமழ்லான் மாத நோன்புகளுக்கு நல்வரவு கூறுவனவென்று அண்ணலார் (ஸல்) அவர்

கள் புகழ்ந்ததாக ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

எண்ணிலா நன்மைகள் அம்மாதத்தில் பங்கீடு செய்யப் படுவதால் அதன் பெயர் ஷஅபான் என வைக்கப்பட்டது என்றும் அண்ணலார் (ஸல்) அவர்கள் வர்ணித்ததை ஹழ்ரத் அனஸ் (ரலி) அவர்களே குறிப்பிடுகிறார்கள்.

ஷஅபான் மாதத்தின் இறுதி ஞாயிற்றுக்கிழமை நோன் பிருப்பவரின் பாவங்களையும் இறைவன் மன்னிப்பதாக பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல் லாஹ் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள். ஆனால் அந்த ஞாயிற்றுக்கிழமை ஷஅபான் மாதத்தின் கடைசி நாளாக இருத்தலாகாது. அவ்வாறு அமையுமாயின் முந்தின ஞாயிற் றுக் கிழமையையே கணக்கிட்டுக் கொள்ளவேண்டும். ஏனெ னில் ரமழான் மாதத்தின் நோன்பை கண்ணியப்படுத்த ஷஅபானின் இறுதி நாட்களில் நோன்பிருப்பது தவிர்க்கப் பட்டுள்ளது.

## பாக்கியமுடைய பராஅத் இரவு

حٰمٓ ۚ وَالْكِتٰبِ الْمُبِيْنِ ۙ اِنَّاۤ اَنْزَلْنٰهُ فِىْ لَيْلَةٍ مُّبٰرَكَةٍ اِنَّا كُنَّا مُنْذِرِيْنَ ۙ فِيْهَا يُفْرَقُ كُلُّ اَمْرٍ حَكِيْمٍ ۙ

"ஹாமீம்! தெளிவான இவ்வேதத்தின் மீது சத்திய மாக, நிச்சயமாக நாம் இ(ந்)த(க்குர்ஆ)னை மிக்க பாக்கியமுள்ள ஓர் இரவில் (முதல் முறையாக) இறக்கி வைத்து நிச்சயமாக நாம் (இதன் மூலம்) அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றோம்—என அல்லாஹ் தன் வேத மாமறையின் மீதே சத்தியமிட்டு (44 : 1 to 3 வசனங்களின்

ப—3

மூலம்) சுட்டிக் காட்டும் பாக்கியமிக்க இரவு ஷஅபான் மாதத்தின் பதினைந்தாம் இரவே என மிகப் பெரும்பாலான விரிவுரையாளர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

وَهٰذَا كِتٰبٌ اَنْزَلْنٰهُ مُبٰرَكٌ مُّصَدِّقُ الَّذِىْ بَيْنَ يَدَيْهِ

"(நபியே!) இது ஒரு வேதமாகும். இதனை நாமே உம் மீது அருளினோம். (இது) பாக்கியமுடையதாகவும், தனக்கு முன்னுள்ள வேதத்தை உண்மையாக்கி வைப்பதாகவும் இருக்கிறது.'' —(6 : 92)

وَهٰذَا كِتٰبٌ اَنْزَلْنٰهُ مُبٰرَكٌ فَاتَّبِعُوْهُ وَاتَّقُوْا لَعَلَّكُمْ تُرْحَمُوْنَ

(மனிதர்களே!) இதுவும் வேத நூலாகும். இதனை நாமே அருட்செய்தோம். (இது) மிக்க பாக்கியமுடையது. ஆகவே இதனை நீங்கள் பின்பற்றுங்கள். அன்றி (அவனுக்குப்) பயந்து (பாவத்திலிருந்து விலகி)க் கொள்ளுங்கள். அதனால் அவனின் அருளுக்குள்ளாவீர்கள். (6 : 155)—என்றெல்லாம் இம்மைக்கும் மறுமைக்கும் ஈடேற்றஞ் சேர்ப்பிக்கும் இணையில்லா ஞானக் கருவூலமாக விளங்கும் திருக்குர்ஆனே பாக்கியமுடையது தான் என அல்லாஹ்வின் அத்திருவேதமே பல இடங்களில் மீட்டி உணர்த்துகிறது.

திருக்குர்ஆனால் உலகம் அடையப் பெறும் பாக்கியங்கள் அனந்தம். அதனை ஓதியவர், உணர்ந்து ஏற்றவர் நரகத்தை விட்டும் விடுதலை பெற்றார். அந்தப் பாக்கியம் அவரோடேயேயன்றி அவருடைய முன்னோர்களையும் சென்றடைகிறது. பிந்திய வழிவாறுகளையும் எத்துகிறது. திருமறையைப் பார்த்து ஓதியவரின் பெற்றோர்களின் சிரமங்களை இறைவன் குறையச் செய்கிறான்—அவர்கள் நிராகரிப்பிலேயே இறந்தவர்களானாலும் சரியே—என

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

பாக்கியங்களைக் கொண்ட திருக்குர்ஆன் இறக்கப்பட்ட இரவும் ஐயமின்றி பாக்கியமுடையதே. ஏனெனில், அவ்விரவில் அதிகமான விண்ணவர்கள் மண்ணுலகின்பால் இறங்குவதாலும், பெருமளவில் இறையருள் பொழியப் படுவதாலும், இறைஞ்சுதல்கள் அங்கீகரிக்கப் படுவதாலும் அது பாக்கியம் பெற்ற இரவே என விரிவுரையாளர்கள் ஏற்கின்றனர்.

அந்த இரவில் பூமியின் மீது இறைவனின் கருணாமாரி சொரியப்படுகிறது; அருள் பொழியப்படுகிறது; வளமும் நலமும் வாரி வழங்கப்படுகின்றன; பிழைகள் பொறுக்கப்படுகின்றன; மன்னிப்புகள் வழங்கப்படுகின்றன — என்பனவற்றுக்காதாரமான ஏராளமான அருள் மொழிகளுக்கெல்லாம் மேலாக,

''ஷஅபான் மாதத்தின் இடைப்பட்ட அந்த இரவில், இறைவன் அடிவானத்தின்பால் பிரசன்னமாகி இணை வைத்து வணங்கும் 'முஷ்ரிக்'குகள், பொருமல் மனங் கொண்டோர், பந்தத்துவத்தை முறிப்போர், விபச்சாரப் பெண்டிர் ஆகியோரைத் தவிர்த்த மற்ற அனைவரையும் மன்னித்து விடுகிறான்—என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களே அருளக் கேட்டு ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள்.

شَهْرُ رَمَضَانَ الَّذِىٓ اُنْزِلَ فِيْهِ الْقُرْاٰنُ

''ரமழ்லான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய) தென்றால், அதில்தான் திருக்குர்ஆன் (என்னும் வேத மாமறை) அருளப்பட்டது.'' —(2 : 185)

إِنَّا أَنزَلْنَاهُ فِي لَيْلَةِ الْقَدْرِ

''நிச்சயமாக நாம் இந்தக் குர்ஆனைக் கண்ணி மிக்க — லைல(த்)துல் கத்ர் — இரவில் இறக்கி வைத்தோம்'' (97 : 01) என்ற வேத வசனங்களை ஆதாரமாகக் கொண்டு ஹழ்லரத் இக்ரிமா (ரஹ்) போன்றோர் ரமழ்லான் மாதத்தின் கத்ருடைய இரவையே 'பாக்கிய மிக்க இரவு' என அறிவிக்கின்றனர். ஆயினும் 'பராஅத் இரவு' எனப்படும் 'ஷஅபான்' மாதத்தின் பதினைந்தாம் இரவின் சிறப்பினை விளக்கிட நின்ற அறிஞர்கள்,

திருக்குர்ஆன் பாதுகாக்கப்பட்டிருந்த — லவ்ஹுல் மஹ்ஃபூழ்ள் — பட்டோலையிலிருந்து ஷஅபான் மாதம் பதினைந்தாம் இரவில் முதலாம் வானத்துக்கு இறக்கப்பட்டதாகவும், பின்னர் அது ரமழ்லான் மாதத்தின் ஒருகண்ணியமிக்க இரவில் துவங்கி இருபத்து மூன்றாண்டு கால இடைவெளியில் சன்னஞ் சன்னமாக அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் நெஞ்ச கமலத்தில் இறக்கப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார்கள்.

فِيهَا يُفْرَقُ كُلُّ أَمْرٍ حَكِيمٍ

''அறிவார்ந்த சகல காரியங்களும் அதில்தான் நம்முடைய கட்டளையின்படி நிர்மாணிக்கப்படுகின்றன — என்ற (44 : 04) வசனத்தையும் விளக்கிட நின்ற விரிவுரையாளர்கள், 'அவை அனைத்தும் விதிவசப்பட்டோலையில் முன்னரே பதிவு செய்யப்பட்டு விட்டன. பின்னர், ஒவ்வோர் ஆண்டுக்குமான கட்டளைகளும் பாதுகாக்கப்பட்ட 'லவ்ஹி'லிருந்து பெயர்த்தெழுதப்பட்டு விண்ணவர்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன. அப்பணியே ஷஅபான் மாதம் பதினைந்தாம் இரவில் துவங்குகிறது; ரமழ்லான்

மாதத்தின் கண்ணியமிக்க இரவு வரை தொடர்கிறது — என்றெழுதுகிறார்கள்.

பாவங்களிலிருந்து மனிதர்கள் பச்சாதாபங் கொண்டு விடுதலை பெறும் இரவாகவும் நரகிலிருந்து இறைவனால் மனிதர்களுக்கு விடுதலை வழங்கப்படும் இரவாகவும் விளங்கு வதாலேயே ஷஅபான் மாதத்தின் இந்தப் பதினைந்தாம் இரவு பராஅத் இரவு — லைல(த்)துல் பராஅ — விடுதலை பெறும் இரவு என வழங்கப்படுகிறது.

சடைந்து விலகுதல், வெறுத்து ஒதுங்குதல் என்று பொருள் தரும் 'பரீஅ' என்ற மூலச்சொல்லிலிருந்து பிறந்ததே 'பராஅத்' என்பது. பராஅத் இரவில் சடைந்து விலகும் இரண்டு வர்க்கத்தினரை ஜீலானின் ஞானி (ரஹ்) அவர்கள் உலகுக்கு அடையாளங்காட்டுகிறார்கள்: அல்லாஹ்விடம் சடைவு கொண்டு வழிகேடர்கள் விலகுகின்றனர். இறை நேசர்கள் ஈனத்தனத்தையும் வழி கேட்டையும் வெறுத்து ஒதுங்குகின்றனர்.

அந்த இரவில் எல்லா மலக்குகளும் 'ஹழ்லீரத்துல் குதுஸ்' எனப்படும் பரிசுத்தத் திருச்சன்னிதானத்தில் தங்க ளுக்கான கட்டளைகளை ஏற்பதற்காக ஒன்று கூடுகின்றனர்.

அந்த இரவில் அல்லாஹ் தன் கருணைப் பார்வையைப் படைப்புகளின் புறம் செலுத்துகிறான். பாவத்தை விட்டும் பரிசுத்தப்பட நாடுபவரை அவன் பரிசுத்தப்படுத்தி விடுகி றான். மறு ஆண்டின் அந்த இரவு வரை அவர் பரிசுத்த மானவராகவே இருப்பார் — என ஹக்கீம் இப்னு கெய்ஸான் எழுதுகின்றனர்.

அல்லாஹுத் தஆலா அந்த இரவில் அடுத்த ஆண்டுக் கான செயல் முறைகள் அனைத்தையும் நிர்ணயம் செய்து விடுகிறான். உயிர் வாழ்பவர்களின் பட்டியலிலிருந்து பலரின்

பெயர்கள் மரணிப்பவர்களின் பட்டியலுக்கு மாற்றி எழுதப் படுகின்றன. எழுதப்பட்ட எண்ணிக்கையில் பின்னர் மாற்றம் செய்யப்படுவதில்லை—என ஹழ்லரத் இப்னு அப்பாஸ் [ரலி] அவர்களால் உரிமை வழங்கப்பட்ட மவ்லா இக்ரிமா (ரஹ்) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

அநேகர் பயணம் புறப்படுவர், அவர்களின் பெயர்கள் மரணிப்பவர்களின் பட்டியலில் இருக்கும். ஒருவர் திருமணம் புரிவார், அவருடைய பெயரும் மரணிப்பவர்களின் பட்டிய லில் இருக்கும்—என 'இப்னு யஸார்' எச்சரிக்கின்றனர்.

''ஷஅபான் மாதத்தின் பதிமூன்றாம் இரவில் அண்ண லார் [ஸல்] அவர்கள் தங்களின் உம்மத்தினருக்காகப் பரிந்து இறைஞ்சினார்கள். இறைவனால் அவர்களின் பரிந் துரை மூன்றிலொரு பகுதி சமூகத்தினருக்கு ஏற்கப்பட்டது. அதுபோன்றே பதினான்காம் இரவிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் பரிந்து இறைஞ்சினார்கள். அன்று அவர்களின் பரிந்துரை மூன்றிலிரு பகுதி சமூகத்தினருக்காக ஏற்கப் பட்டது. அண்ணலார் (ஸல்) அவர்கள் பதினைந்தாம் இரவிலும் மிகுதமாகப் பரிந்து இறைஞ்சியபோது அல்லாஹ், தரிகெட்ட ஒட்டகைகளைப் போல தன்னிடமிருந்து முகந்திருப்பி ஓடுபவர்களைத் தவிர்த்து மற்ற அனைவருக் காகவும் தூதர் பெருமான் (ஸல்) அவர்களின் பரிந்துரையை ஏற்றுக் கொண்டான்—என அல்லாமா ஸாவீ [ரஹ்] அவர் கள் எழுதுகிறார்கள்.

சுவனத்தை அன்று பூரணமாக அலங்கரிக்க ஜிப்ராஈல் (அலை) அவர்களுக்குக் கட்டளையிடப்படுகிறது. விண்ணின் தாரகைகளுடையவும் மண்ணின் துகள்களுடையவும் மரங் களனைத்திலும் உள்ள இலைகளுடையவும் எண்ணிக்கையள வுக்கு என் அடியார்களை இன்று நான் மன்னிப்பேன் என அல்லாஹ் ஹழ்லரத் ஜிப்ராஈல் (அலை) அவர்களிடம்

கூறி சுவனத்தைச் சித்தப்படுத்தும்படி ஏவுகிறான் என்றெழு தப்படுகிறது.

ஜோதிடன், மாந்திரீகன், குடிகேடன், விபச்சாரகன், பெற்றோர்க்கு முரண்பட்டவன், வட்டி வணிகன், குழப்பக் காரன், மோசடி செய்பவன், மனப் பொருமல் கொண்ட வன், மார்க்கம் வரையறுத்த காரணமின்றி உறவின் முறை யைத் துண்டித்துக் கொண்டவன் ஆகியோரைத் தவிர்த்து மற்ற அனைவரையும் அல்லாஹ் அவ்விரவில் மன்னித்து விடுகிறான் என்ற அமுத மொழியை எடுத்தெழுதும் அல்லா மா ஸாவீ (ரஹ்) அவர்கள் அத்தகையோரும் அந்நாள் வரு முன்பே தங்களின் பிழைகளுக்குப் பச்சாதாபப்பட்டு, கழு வாய் தேடிக்கொள்வார்களாயின் மன்னிக்கப்பட்டு விடுவார் களே என குறிப்பிடுகிறார்கள்.

அன்றைய பொழுதடைந்ததுமே உலகவானில் அல்லாஹ் வின் புறமிருந்து ''என் அடியார்களே! உங்களில் பிழை பொறுக்கத் தேடுபவர்கள் யார்? நான் அவர்களின் பிழை பொறுக்கிறேன். பாவமன்னிப்பு கோருபவர்கள் யார்? அவர் களின் பாவங்களை மன்னிக்கிறேன். உங்களில் என்னிடம் இரணம் தேடுபவர்கள் யார்? நான் அவர்களுக்கு இரண மளிக்கின்றேன். உங்களில் சோதனை வயப்பட்டவர்கள் யார்? நான் அவர்களுக்கு நிவாரணமருள்கிறேன்'' என்ற அழைப்புகள் விடுக்கப்படுதாகவும், இரவெல்லாம் கழிந்து விடியும் வரை அல்லாஹு தஆலா அவ்வழைப்புகளை விடுத்துக் கொண்டே இருப்பதாகவும் அண்ணல் எம்பெரு மான் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

அந்த இரவெல்லாம் மண்ணுலக மாந்தருள் நல்லோர்க்கு விண்ணுலகில் நன்மாராயங்கள் அள்ளிச் சொரியப்பட்ட வண்ணமாகவே உள்ளன. விண்ணவர்க்கோ அது பெருநா ளாகவே ஆகிவிடுகிறது என மெய்நிலை கண்ட ஞானி முஹியத்தீன் ஜீலானி (ரஹ்) அவர்கள் எழுதுகிறார்கள்.

ஜீலானின் கோமான் தீனுக்கு ஜீவனளித்த சீமான் மேலும் எழுதுகிறார்கள் : 'ஈதுல் ஃபித்ர்' எனப்படும் ஈகைத் திருநாளும், 'ஈதுல் அழ்ல்ஹா' எனப்படும் தியாகத் திருநாளும் மண்ணுலக முஸ்லிம்களுக்கு இரு பெருநாள்களாக விளங்குவதே போல், மலக்குகளுக்கும் இரு திருநாட்கள் உண்டு. அவை பாக்கியம் பெற்ற பராஅத் இரவும் கண்ணியமிக்க கத்ருடைய இரவுமாம். உலக மாந்தர்கள் உறக்கமுடையவர்கள். எனவே அவர்கள் தங்கள் மகிழ்ச்சியைப் பகலில் கொண்டாடுகிறார்கள். விண்ணவர்களோ உறக்கமற்றவர்கள். எனவே அவர்கள் இரவுகளில் களிகூர்கிறார்கள்.

அல்லாஹ் மனிதர்களுக்கு பராஅத் இரவைத் தெரியச் செய்து, கத்ருடைய இரவை அவர்களைத் தேடச் செய்ததில் பொதிந்துள்ள மேதையையும் மாதவர்க்கரசரவர்கள் விவரிக்கிறார்கள்:

கத்ருடைய இரவு இறைவனின் கருணா மாரி பொழியப்படும் இரவு; மன்னிப்புடைய இரவு; நரகினின்றும் மக்களுக்கு விடுதலை நல்கப்படும் இரவாகும். மக்கள் அந்த இரவையே தங்களுக்குப் போதுமானதாக எண்ணி மற்ற நாட்களை அலட்சியப்படுத்தி நற்செயல்களாற்றாதிருந்து விடக் கூடாதென்பதற்காகவே அது மறைக்கப்பட்டது.

பராஅத் இரவோ தீர்ப்புகள் வழங்கப்படும் இரவு; கட்டளைகள் பிறப்பிக்கப்படும் இரவு. அந்த இரவில் மனிதர்களுக்குமகிழ்ச்சியும்உண்டு;மனவிசாரமும்உண்டு. அவர்களின் எண்ணங்கள் ஏற்கப்படுவதும் உண்டு; எடுத்தெறியப்படுவதும் உண்டு. அவர்களில் பொருந்தப் பெறுபவர்களும் உண்டு; புறக்கணிக்கப்படுபவர்களும் உண்டு. அவர்களுக்கு நற்பேறும் உண்டு; துர்ப்பேறும் உண்டு. சிலருக்கு வாய்ப்பளிக்கப்படும். சிலருக்கு வரம்பு கட்டப்படும். வெகுமதிகளைப் பெறலாம் சிலர்; வேதனையையும் எதிர் கொள்ளலாம். உழைப்

பின் ஊதியத்தைச் சிலர் பெறுவர். சிலர் கை பிசைந்து நிற்பர். சிலர் பெருமிதங்கொள்வர். சிலர் சிரந்தாழ்த்தி நிற்பர். அருள் பொழியப் பெறுபவர் சிலர். சிலருக்கு இருள் போர்த்தப்படும்.

பலரின் பிரேத ஆடைகள் கழுவிச் சித்தப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கும், அவர்களோ தங்களின் மறதியின் காரணமாகவோ மடைமையின் காரணமாகவோ கடைவீதிகளில் உலவிக் கொண்டிருப்பர். தோண்டப்பட்டுக் கொண்டிருக்கும் மண்ணறைகளுக்குடையோர் பலர் மந்தகாச இன்பத்தில் மூழ்கிக் கிடப்பர். மரணவாசலை நெருங்கிவிட்ட பலர், நிர்மாணமாகும் தங்களின் மாடமாளிகைகள் நிறைவினை எய்துவதைக் கண்டு களித்த வண்ணமிருப்பர்.

லாபத்தை எதிர்பார்த்திருந்தவர்கள் ஏமாற்றத்தையே பெற நேரலாம். சுவனத்தைப் பற்றிய நம்பிக்கை கொண்டிருந்தவர்களில் பலர் நரக வாசலைச் சந்திக்க நேரலாம். மன்னிப்பையேஎதிர்பார்த்திருந்தவர்கள் தண்டனையே பெற நேரலாம். அரவணைப்பையே நம்பிக் கிடந்தவர்களுக்குப் பிரிவினையே பரிசாகக் கிடைக்கலாம். அதிகாரத்தை எதிர்பார்த்திருந்த பலருக்கு அழிவே சன்மானமாகலாம்.

விதிகள் நிர்ணயிக்கப்படும் இத்தகைய இரவைத் தேடுவதில் நம்முடைய காலம் விரையமாகி விடாமல் தெளிவாக்கி வைத்தது இறைவன் நம்மீது புரிந்துள்ள பெருங்கருணையாகும்.

"ஓரு ஷஅபான் மாதத்தின் மத்திய இரவில் விழித்த நான் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை என் போர்வையில் காணாது திடுக்கிட்டேன். எழுந்து நான் என் அறையினுள் துழாவியபோது என் கரம் அவர்களின் கால்களைத் தொட்டது. அச்சமயம் என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் மண்டியிட்ட நிலையிலிருந்தார்கள். "என் ஆண்டவனே!

என் உடலும் மனமும் உனக்கு மண்டியிடுகின்றன. என் இதயம் உன்பால் நம்பிக்கை கொண்டுள்ளது. உன் அருட் கொடைகளுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். என் பாவங்களை நான் ஒப்புக் கொள்கிறேன். நாயனே! என் ஆன்மாவுக்கு நான் அநீதியிழைத்துக் கொண்டேன். நீ என்னை மன்னித்து விடுவாயாக. நிச்சயமாக உன்னை யன்றி பிழை பொறுப்பார் எவருமில்லை. உன் வேதனை யிலிருந்து தப்பிக்க உன் கருணையின் பால் நான் காவல் தேடுகிறேன். உன் கோபத்திலிருந்து தப்பிக்க உன் பொருத் தத்தை நாடுகிறேன். உன் தண்டனையிலிருந்து விடுபட உன்னிடமே மன்றாடுகிறேன். உன் புகழை விரித்துரைக்க வல்லார் எவருமிலர்—நீயே உன் புகழை விரித்துரைத் துள்ளது போல்—என அவர்கள் வழுத்திக் கொண்டிருந் ததை நான் கேட்டேன்—என்று உம்முல் முஉமினீன் ஆயிஷா [ரலி] அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அதனைத் தொடர்ந்த நிகழ்ச்சிகளையும் அன்னையாரவர்கள் பின்வருமாறு விவரிக்கிறார்கள்: பெருமானார் (ஸல்) அவர்கள் விடியும் வரை வணக்கத்தில் ஈடுபட்டிருந் தார்கள். சில நேரங்கள் அவர்கள் நின்றபடியே வணங்கி னார்கள். இடையிடையே அமர்ந்தும் வணக்கம் புரிந்தார் கள். அவர்களின் பாதங்களும் வீங்கி விட்டன. அவர்களின் பாதங்களைப் பிடித்து விட்டபடி, ''ஏந்தலே! என் தந்தை யும் தாயும் தங்களுக்கர்ப்பணம். அல்லாஹ் தங்களின் முந்திய பிந்திய எல்லாப் பாவங்களையும் மன்னித்து விடவில்லையா? அவன் தன் அன்பையும் அருளையும் தங்கள் மீது பூரண மாகக் சொரிந்திடவில்லையா? (அவ்வாறிருந்தும் தாங்கள் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்கிறீர்களே)'' என்று கேட்டேன். ''ஆயிஷா! அந்த என் இறைவனுக்கு நன்றி யுள்ள அடியானாக நான் விளங்க வேண்டாமா?'' என வினவிய என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் ''இந்த இரவு எத்தகைய இரவென்பதை நீ அறிவாயா?'' என கேட்டார்

கள். ''அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்களே கூறுங்கள்'' என்றேன் நான். ''இந்த இரவில்தான் உலக நடை முறை கள், அடியார்களின் செயல் முறைகள் விண்ணளவில் உயர்த்தப்படுகின்றன. இவ்வாண்டு பிறக்கப் போகும் ஒவ்வொரு குழந்தையின் பெயரும் பதியப்படுகிறது; மரணிக்கப் போகும் ஒவ்வொருவருடைய பெயரும் எழுதப்படுகிறது. படைக்கப்பட்ட ஒவ்வொன்றின் இரணமும் பங்கு பிரிக்கப் படுகிறது. ஒவ்வொருவருடைய செயல்பாடுகளும் இதே இரவில் கணக்கிடப்படுகின்றன'' என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அடுத்து நான், ''அல்லாஹ்வின் தூதரவர்களே! அல்லாஹ் அருள் புரிந்தாலன்றி எவருமே சுவனம் புக முடியாதா?'' என கேட்டேன்.

''ஆம். அல்லாஹ் அருள் புரிந்தாலன்றி ஒருவரும் சுவனம் புக முடியாது'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

''தாங்களுமா?'' என நான் மீண்டும் கேட்டபோதும், ''ஆம், நானும்தான். ஆனால் அல்லாஹ் தன் அருளால் என்னைப் போர்த்துக் கொண்டான்'' என அருளிய என் நாயகர் (ஸல்) தங்களின் புனித கரங்களை முகத்திலும் தலையிலும் தடவிக் கொண்டார்கள்.

தங்களின் சமுதாயத்தினரையும் அவ்விரவில் விழித்திருந்து வணங்கும்படியாகவும் மறுநாள் பகலில் நோன்பிருக்கும்படியாகவும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் பணித்துள்ளதை ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களும் அறிவித்துள்ளார்கள்.

நன்மைகளைத் தேடுவதையே நாட்டமாகக் கொண்டிருந்த நம் முன்னோர்கள் அன்று பொழுதடைவதிலிருந்தே

துவங்கி மீண்டும் பொழுது புலரும் வரை இரவெல்லாம் விழித்திருந்து நிறைவணக்கம் புரிந்து இறையருளைத் தேடு பவர்களாயிருந்தார்கள்.

திருக்குர்ஆன் ஓதுதல், திருத்தூதர் (ஸல்) அவர்கள் பேரில் 'ஸலவாத்' கூறுதல், விதிக்கப்பட்டதற்கு மேலதிக மான - நஃபில் - தொழுகை தொழுதல் போன்றவற்றின் மூலம் தங்களின் விழிப்பால் முழு இரவுக்கும் உயிரூட்டி பல் வேறு செயல்முறைகளை அவர்கள் நமக்குக் காட்டிச் சென் றுள்ளார்கள்.

முக்கியமாக,

'மக்ரிபு' தொழுகைக்குப் பின் திருக்குர்ஆனின் யாஸீன் அத்தியாயத்தை மூன்று முறை ஓத வேண்டும்—மூன்று குறிக் கோளை நாட்டமாகக் கொண்டு,

('தக்வா' வென்னும் இறையச்சத்துடன் கூடிய) நீண்ட ஆயுளைக் குறிக்கோளாகக் கொண்டு முதல் முறை ஓத வேண்டும்.

நோய் நொடிகள், துன்பங்கள், சோதனைகளை விட் டும் நிவாரணமும், கார்மானமும் தேடி இரண்டாம் முறை ஓத வேண்டும்.

(சத்தியத்துக்கு புறம்பாக எவருக்கும் கட்டுப்பட்டிருக்க வேண்டிய நிர்ப்பந்தமின்றி) நம்முடைய தேவைகளில் நாமே தன்னிறைவு பெற்றிலங்க இறையருளை நாடி மூன்றாம் முறையாக ஓத வேண்டும்.

இம்மூன்று குறிக்கோள்களையும் சமர்ப்பித்து இறை யருளை யாசிக்கும் பொருள் செறிந்த 'துஆ' வை ஒவ்வொரு முறை யாஸீன் ஓதி முடித்ததும் உருக்கத்துடன் ஓதி இறைஞ்ச வேண்டும்.

தொடர்ந்து நஃபிலான தொழுகைகளைத் தொழலாம். பசித்தவர்களுக்கு உணவளிக்க, மற்ற தர்மங்களைச் செய்ய

நாட்டம் கொண்டோர் வெளிச் சென்று அக்காரியங்களை முடித்து 'இஷா' தொழுகைக்கு விரைந்து திரும்பலாம். 'இஷா' தொழுகைக்குப் பின் விழித்திருந்து தொடர் வணக்கம் புரிய எண்ணங் கொண்டவர்கள் இடைப்பட்ட இந்த வேளையில் தங்களின் உணவுத் தேவைகளையும் நிறைவுபடுத்திக் கொள்ளலாம். (மற்ற வீணான விவகாரங்களின் புறம் கவனத்தைத் திருப்பாதவரை அவர்கள் உணவுண்ணவும் பிறரை உண்ணச் செய்யவும் சென்று திரும்புவதும் கூட தொடர் வணக்கமாகவே கணிக்கப்படுகிறதென்பதை நினைவு கொள்ள வேண்டும்.)

'இஷா' தொழுகையை — முடித்து மீண்டும் மேலதிகப் படியாக — நஃபில் — தொழலாம். 'மக்ரிபு'க்குப் பிறகும் 'இஷா'வுக்குப் பிறகும் 'நஃபில்'கள் தொழுவதற்கு பல் வேறு கணிப்புகள் நூல்களில் காணப்பட்டாலும் பொதுவாக இரண்டிரண்டு 'ரக்அத்'துகளாகவோ நான்னான்கு 'ரக்அத்'துகளாகவோ இயன்றவரையிலும் தொழலாம். வாழ் நாளில் தவறி விட்ட 'கழ்லா' தொழுகைகளையும் தொழுது நிறைவு படுத்திக் கொள்ளலாம். தினசரியோ, வாரமொரு முறையோ, மாதமொரு முறையோ, ஆண்டில் ஒரு முறையோ அல்லது வாழ்நாளில் ஒரு முறையேனும் தொழுது விடும்படியாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் அறிவுறுத்தப் பெற்றுள்ள 'தஸ்பீஹு' தொழுகையையும் தொழலாம்.

இடையிடையே இளைப்பாற சற்று அமர்ந்து குர்ஆன் ஓதலாம். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் திருச் சமுகத்துக்கு ஸலவாத்துகளையும் ஸலாமையும் சமர்ப்பிக்கலாம்.

''என்னுடைய மாதம்'' என அண்ணலார் (ஸல்) அவர்களாலேயே உவக்கப்பட்ட மாதமல்லவோ ஷஅபான். அவர்கள் மீது ஸலவாத்தை ஓத மேலான சிறப்புடைய மாதமே இது.

கடந்துபோன நாட்களில் நாம் இழைத்து விட்டிருக்கக் கூடிய பாவங்கள் ஒவ்வொன்றையும் எண்ணிப் பார்த்து அவற்றுக்காக பிழை பொறுக்கத் தேடிக் கொள்ளல் அவசிய மாகும். இந்த இரவிலேயே நம்முடைய பெயரும் இவ் வாண்டு மரணிப்பவர்களின் பட்டியலில் இணைக்கப்பட் டிருக்கவும் கூடும். இறைவனின் கருணை வாசல் திறக்கப்பட் டிருக்கையில் அவனின் மன்னிப்பை வாரிச் சேர்க்க நமக்கு அருளப்பட்டுள்ள இறுதி வாய்ப்பாகவும் இந்த இரவே அமைந்து விடவும் கூடும். இச்சமயத்தில் வாழ்க்கையில் நாம் இழைத்து விட்டிருக்கக் கூடிய எத்தனையோ பாவங்கள் நம் நினைவுக்கு வராமலும் நம்மை மோசம் செய்யக் கூடும். எனவே, பொதுவாக நம்முடைய எல்லாப் பாவங்களையும் மன்னித்தருளுமாறு இறைவனின் கருணைத் திருமுன் நாம் கழுவாய் தேடிக்கொள்ளக் கிடைத்துள்ள பரக்கத்தான இவ்விரவின் வாய்ப்பை பூரணமாகப் பயன்படுத்திக் கொள் ளப் பூரண கவனம் செலுத்துதல் வேண்டும்.

நம்முடைய பாவங்களுக்குக் கழுவாய் தேடிக் கொள் ளக் கிடைத்துள்ள இச்சந்தர்ப்பத்தில் நம்மை விட்டும் பிரிந்து—மரணித்துப்—போன நம் பெற்றோர், உற்றார், உறவினர், முன்னோர்களையும் நாம் நினைவு கூரல் கட னாகும். ஏனெனில் நாம் இன்று பெற்றுள்ள இவ்வாய்ப்பு அவர்களுக்கு அற்றுப் போய்விட்டது.

"பெருநாட்களன்றும் ஆஷூரா நாளன்றும் ரஜபு மாதம் முதல் வெள்ளிக் கிழமையன்றும் பராஅத் இரவிலும் நன்னம்பிக்கை கொண்டு வாழ்ந்து மறைந்தவர்களின் நல் லான்மாக்கள் அவரவர்களின் உறவினர்களின் வீடுகளுக்கு வருகின்றன. வாயில்களில் நின்று, தாங்கள் விட்டுச் சென்ற உடைமைகளைப் பெற்றனுபவிக்கும் தங்களின் வழிவாறு களிடம் முறையிடுகின்றன : 'எங்களின் வீடுகளில் வசிப்ப வர்களே! எங்களின் உடைமைகளைப் பெற்றுச் சுகிப்பவர்

களே! இறைவனின் பொருட்டால் எங்களுக்காகவும் ஏதேனும் அர்ப்பணிக்க மாட்டீர்களா? நற்செயலாற்றும் வாய்ப்பானது அந்தோ எங்களுக்கு முடிந்து போய்விட்டதே! உங்களுக்கோ இன்னும் அவ்வாய்ப்பு நீடிக்கிறதே! அதில் எங்களுக்கும் ஒரு பங்கை அர்ப்பணிக்கலாகாதா?' என தங்கள் மடியேந்திப் பிரலாபிக்கின்றன. அப்போது அவ்வீட்டார் தங்களின் தொழுகை, வணக்கங்களில் — தர்மச் செயல்களில் அணுவத்துணை நன்மையையாகிலும் அர்ப்பணிப்பார்களாயின் அவ்வான்மாக்கள் மனநிறைவு கொண்டு அவ்வீட்டாரை வாழ்த்தி, வழுத்தித் திரும்புகின்றன'' என்று அருள் ஞானக் கருவூலம் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அவ்வாறாக வந்து நிற்கக்கூடிய ஆன்மாக்களில்,

பத்து மாதங்கள் தங்கள் கர்ப்பத்தில் சுமந்துப் பெற்று, இருபத்து மாதங்கள் வரை தங்கள் இரத்தத்தையே பாலாகப் புகட்டி வளர்த்த தாய்மார்களுடையவை எத்தனையோ!

பரிவுடன் அன்பை ஊட்டி, பண்பை ஊட்டி, அறிவை ஊட்டி, சபை நடுவே தன் மகனைச் சான்றோனாகக் கண்டு மறைந்த தந்தையருடையவை எத்தனையோ!!

அவர்கள் மட்டுமின்றி அவர்களையும் பெற்றெடுத்த முன்னோர்கள், ஆன்றோர்களின் ஆன்மாக்களும் எத்தனை எத்தனை அன்று தங்களின் வழிவாறுகளின் வாசல்களில் மடியேந்திக் காத்திருக்கின்றனவோ !!!

வாழும் வாய்ப்பினை இன்னமும் பெற்றுள்ள நாம் அவர்களையெல்லாம் நன்றியுடன் நினைவு கூரல் வேண்டும். அவர்களின் பிழைகள் பொறுக்கப்படவும் பிரார்த்தித்தல் வேண்டும். அவர்களின் மண்ணறைகளைச் சென்று கண்டு இறைஞ்சுதலும் மேலாம். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களும் அவ்வாறு சென்று, மண்ணறை சென்றடைந்த

மாண்பாளர்களுக்காகப் பிரார்த்தித்துத் திரும்பிய முன் மாதிரியை அருள்மனச் செல்வியார் அன்னை ஆயிஷா நாயகியார் (ரலி) அறிவித்துள்ளார்கள்:

''ஓர் இரவு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் என் இல்லத்துள் நுழைந்தார்கள்; தங்களின் ஆடைகளைக் களையத் துவங்கினார்கள்; இன்னும் முழுமையாகக் களைந்திடவில்லை; திடுமென எழுந்து நின்றார்கள்; ஆடைகளை மீண்டும் அணிந்து கொண்டார்கள்; வெளியில் சென்று விட்டார்கள்; எனக்குக் கடுமையான ரோஷம் ஏற்பட்டது. என் சக்களத்திமார்களில் ஒருவரின் இல்லத்துக்கே அவர்கள் செல்கிறார்கள் என்று எண்ணினேன். உடனே நானும் புறப்பட்டேன் அவர்களைத் தேடி. கடைசியாக நான் அவர்களை "ஜன்னத்துல் பகீஇ'ல் (மதீனாவில் உள்ள அடக்கத்தலம்) நின்று, மரணித்த முஸ்லிம்களுக்காகவும் உயிர்த் தியாகிகளுக்காகவும் பிழை பொறுக்கத் தேடிப் பிரார்த்திக்கும் நிலையில் கண்டேன். அவர்களின் முகம் விண்ணின்பால் அண்ணாந்திருந்தது. ''என் தந்தையும் தாயும் தங்களுக்காகப் பலியாகட்டும். தாங்களோ அல்லாஹ்வின் திருவாசலை நாடி நிற்கிறீர்கள். பாவி நான் உலகாயதச் சூழலில் வசப்பட்டு நிற்கிறேன்'' என என் மனதில் கூறிக் கொண்டே வேகமாக என் இல்லத்தை வந்தடைந்தேன்.

''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் வந்து விட்டார்கள். எனக்கு மூச்சிரைத்துக் கொண்டிருக்கக் கண்டு, ''ஓ ஹுமைரா!* என்ன நடைபெற்றது. ஏன் இவ்வாறு உனக்கு இரைக்கிறது?'' என வினவினார்கள். ''ஏந்தலே! என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணம். இல்

* அன்னை ஆயிஷா நாயகியாரை அண்ணலார் (ஸல்) அவர்கள் அழைக்கும் செல்லப் பெயர். செந்நிறத்தவளே என்பது பொருள்.

லத்துள் நுழைந்து ஆடையைக் களைந்த தாங்கள் மீண்டும் அவற்றை எடுத்தணிந்து வெளியேறக் கண்டு நான் ரோஷ மடைந்தேன். மற்ற ஒரு மனைவியின் இல்லத்துக்கே தாங் கள் செல்கிறீர்கள் என நினைத்தேன். ஆனால் தங்களை நான் 'ஜன்னத்துல் பக்கீஇ'லேயே பிரார்த்தனையில் மூழ்கி யிருக்கக் கண்டேன்'' என்றுரைத்தேன்.

''ஆயிஷா! அல்லாஹ்வும் அவன் தூதரும் உனக்கு அநீதியிழைத்திடுவர் என்றா அஞ்சினாய். அவ்வாறல்ல, ஜிப்ர ஈல் (அலை) என்னிடம் வந்தார்; அல்லாஹுத் தஆலா ஷஅபான் மாதத்தின் இந்தப் பதினைந்தாம் இரவில் உலக வானின் புறம் தோன்றி 'கல்பு' கோத்திரத்தவர்களின் ஆடுகளின் உரோமங்களைவிட மிகுதியான எண்ணிக்கை யில் தன் அடியார்களை மன்னித்து விடுகிறான். இணை வைத்து வணங்குவோர், பொறாமை நெஞ்சங் கொண் டோர், பந்தத்துவத்தைத் துண்டிப்போர், வழிகேடர், தங்களின் ஆடைகள் தரையில் இழுபட நடக்கும் ஆண வங்கொண்டோர், பெற்றோர்க்கு முரண்பட்டோர், குடி கேடர் ஆகியோரின் புறம் மட்டும் அவன் தன் கருணைப் பார்வையைச் செலுத்துவதில்லை என கூறிச் சென்றார்— என்றருளிய என் ஏந்தல் தங்கள் ஆடைகளைக் களைந்தார் கள். ''ஆயிஷா! இந்த இரவை விழித்திருந்து கழிக்க என்னை அனுமதிப்பாயா?'' என வினவினார்கள். ''மனப் பூர்வமாக ஏந்தலே! என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணம்'' என்றேன்.

''அண்ணலார் (ஸல்) அவர்கள் தொழ நின்றார்கள். நிலையில் அவர்கள் குறுகிய நேரமே நின்றார்கள். ஃபாத்திஹா ஸூராவையடுத்து ஒரு சிறு அத்தியாயத்தை அவர்கள் ஓதினார்கள். பின்னர் இரவின் பகுதி காலம் வரை அவர்கள் மண்டியிட்டுக் கிடந்தார்கள்; மீண்டும் எழுந்து நின்றார்கள். முந்தினதைப் போன்ற மிகக் குறு

ப—4

கிய நேரமே குர்ஆன் ஓதினார்கள். மீண்டும் மண்டியிட்ட அவர்களின் 'ஸஜ்தா' வின் நிலை விடியும் வரை நீடித்தது. அதனைப் பார்த்த வண்ணமே இருந்த எனக்கு அல்லாஹ் தன் தூதரின் ஆன்மாவைக் கைப்பற்றியே கொண்டானோ என்ற ஐயம் ஏற்பட்டு விட்டது. என் ஏக்கம் நீண்டது. முடிவில் நான் அருகிச் சென்று அவர்களின் உள்ளங்கால் களை வருடினேன். பெருமானார் (ஸல்) அவர்கள் அவற்றை அசைத்தார்கள். மண்டியிட்டிருந்த நிலையிலேயே,

أَعُوذُ بِعَفْوِكَ مِنْ عُقُوبَتِكَ وَأَعُوذُ بِرَحْمَتِكَ مِنْ نِعْمَتِكَ
وَأَعُوذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ وَأَعُوذُ بِكَ مِنْكَ جَلَّ ثَنَاؤُكَ
لَا أُحْصِي ثَنَاءً عَلَيْكَ أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ

''என் இறைவா! உன் தண்டனையிலிருந்து தப்பிக்க மன்னிப்பெனப்படும் உன் கருணையில் கார்மானம் தேடுகி றேன். உன் கோபத்திலிருந்து தப்பிக்க உன் பொருத்தத் தில் பாதுகாவல் தேடுகிறேன். உன்னிடமே நான் பாதுகா வல் தேடுகிறேன். உன் புகழ் வலுப்பமுடையது. அதனை நீயே விரித்துரைத்துள்ளதற்கொப்ப விரித்துரைக்க நான் வல்லவனல்லன்'' என்ற அவர்களின் மன உருகுதலை நான் செவியுற்றேன்.

''விடிந்தபோது நபி பெருமான் (ஸல்) அவர்களிடம், 'இரவு தாங்கள் மண்டியிட்ட நிலையில் இறைஞ்சிய மொழி கள் போன்று எப்போதும் நான் செவியுற்றதில்லையே' என வினவினேன். 'நீ அதனை மனனமிட்டுக் கொண்ட னையா?' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவினார் கள். 'ஆம்' என்றேன் நான். ''நீயும் அதனை ஓதி வா. மற்றவர்களுக்கும் கற்பி. ஏனெனில் மண்டியிட்டு அவ்வாறு ஓதும்படி ஜிப்ரஈல் (அலை) எனக்குப் போதித்துச் சென் றார்'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.''

ஒரு பராஅத் இரவில் தங்களின் இல்லத்திலிருந்து வெளிவந்த ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களின் முகம் மண்ணறையிலிருந்து தோண்டி எடுக்கப்பட்ட பிரேதத்தின் முகத்தைப் போன்றிருந்தது. காரணம் வினவப்பட்டது. ''ஆண்டவன் மீதாணையாக! அலை கடலின் நடுவே தன் நாவாய் உடையப் பெற்றவனின் கலக்கமும் கூட என் கலக்கத்தை விட மிஞ்சியதாய் இருக்க முடியாது'' என்றார்கள் இமாம் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள். 'ஏன்? என்ன நடந்து விட்டது?' என வினவினர் மக்கள். ''நான் தேடிக் கொண்ட தீவினைகளோ தீராமலே இருக்கின்றன. இந்த நிலையில் என் நற்செயல்களாவது ஏற்றுக் கொள்ளப்படுகின்றனவோ அல்லது என் முகத்திலேயே வீசியடிக்கப்படப் போகின்றனவோ தெரியவில்லையே!'' என கவலையுற்றார்கள் அப்பெரியார்!

இறையச்சப் பேணுதலின் வெளிப்பாடு இது.

''உங்களின் வல்லமைக்கேற்றவாறு நன்மையான காரியங்களைச் செய்து கொண்டேயிருங்கள். அல்லாஹ் தன் கிருபையைச் சொரியச் சளைக்கவே மாட்டான், நீங்கள்தாம் சளைத்துப் போவீர்கள் — என அண்ணல் எம்பெருமானார் [ஸல்] அவர்கள் அருளக் கேட்டு ஹழ்ரத் அபூஹுரைரா [ரலி] அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

பாக்கியங்கள் நிறைந்த இந்த இரவை அடையப் பெறும் நாம் அதன் அருமையை உணர்ந்து, பெருமைகளைப் பேணி நற்கருமங்களை ஆற்றி, பிழைகள் பொறுக்கப் பெற்று, இறைவனின் பேரருளால் சூழப் பெறும் பேற்றினை அடைய முயல்வோமாக!



# ரமழ்லான்-அல்-முபாரக்

'ரமழ்லான்' என்பது அல்லாஹ்வின் திருப்பெயர்களுள் ஒன்று. பூசல்களை விட்டும் தடுத்துப் புனிதப்படுத்தப்பட்டுள்ள ரஜபு மாதம் 'ஷஹ்ருல் அஸம் — அமைதி மாதம்' எனப்படுவது போல் 'ஷஹ்ரு ரமழ்லான்' அல்லாஹ்வுடைய மாதமாகும் — என ஹழ்லரத் அப்துல்லாஹ் [ரஹ்] அறிவிக்கிறார்கள்.

அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களும் அதனை அல்லாஹ்வுடைய மாதமென்றே கூறியிருப்பதைத் தங்களின் முன்னோர்களிடமிருந்து கேட்டு ஹழ்லரத் ஜஅஃபர் ஸாதிக் [ரஹ்] அவர்கள் நினைவூட்டுகிறார்கள்.

''வெறுமனே ரமழ்லான் என குறிப்பிடாதீர்கள். அல்லாஹ்வின் திருவேதம் கற்பிக்கும் உறவையும் சேர்த்து 'ஷஹ்ரு ரமழ்லான்' என்றே கூறுங்கள் — என பெருமானார் [ஸல்] அவர்கள் கூறியதாக ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

'ரமழ்ல்' என்ற சொல்லுக்கு கரித்தல், தீய்த்தல் என்ற பொருள்களுண்டு. ரமழ்லான் மாதத்தில் மேற்கொள்ளப்படும் தொடர்படியான வணக்க வழிபாடுகள் பாவங்களைத் தீய்த்துக் கரித்து விடுவதாலும் இம்மாதம் ரமழ்லான் என அழைக்கப்படுகிறது. மறுமையைப் பற்றிய கவலையினாலும், விசாரணையைப் பற்றி எச்சரிக்கப் பெற்ற அச்சத்தினாலும் மனம் புழுக்கமடைவதாலும் ரமழ்லான் என்ற இம்மாதத்தின் பெயரில் பொருந்தங் காணுகிறார்கள் அறிஞர்கள்.

ஆண்டு முழுதும் உடலில் சேர்ந்து வரும் அழுக்குப் பொருள்கள் இந்த ஒரு மாத நோன்பினால் ஏற்படும் பசி,

தாகத்தைக் கொண்டு கரிக்கப்படுவதாகவும் ஆயப் பட்டுள்ளது.

**அ**ருளிறங்கும் பருவ காலத்தின் நிறைவுடைய மாத மிது; விளைச்சலை அறுத்துச் சேமிக்கும் தலையாய மாதம்.

அடியான் இறை நெருக்கத்தைத் தேடிப் பெறும் மாதம்; அல்லாஹ் தன் கிருபாவாரியை அள்ளிச் சொரியும் மாதம்.

''இம்மாதத்தின் முந்திய பத்து நாட்கள் அல்லாஹ்வின் அருளினால் சூழப் பெற்றவை; மத்திய பத்து நாட்கள் (பிழை பொறுக்குதல் எனப்படும் அவனின்) மன்னிப்பைச் சுமந்து வருபவை; பிந்திய பத்து நாட்களோ நரகிலிருந்து விடுதலைக்கான அவனின் உறுதிமானங்களை அணைத்து வருபவை. அம்மாதத்தில் தம் அடிமையின் (பணியாளரின்) வேலைப் பளுவைக் குறைப்பவருக்கு அல்லாஹ் நரகை விட்டும் விடுதலை நல்குவான் — என அண்ணல் எம் பெருமானார் [ஸல்] அவர்கள் அருளியுள்ளார்கள்.

இவ்வாறாக அருளும் கருணையும் தயாளமும் சூழ்ந்திருப் பதாலேயே சவுபாக்கியங்கள் சூழ்ந்த ரமழ்லான்-அல்-முபா ரக்—பரக்கத்துடையது என வழங்கப்படுகிறது.

''ரமழ்லான் மாதத்தில் விளையக் கூடிய நன்மைகளை யும், அடையப் பெறும் பாக்கியங்களையும் அடியார்கள் விளங்கிக் கொண்டார்களானால் ஆண்டு முழுவதுமே ரமழ் லானாக இருந்து விடக் கூடாதா என அவர்கள் ஆவலுறு வார்கள் என்று பெருமானார் [ஸல்] அவர்கள் கூறியதாக ஹழ்ரத் அபூ மஸ்ஊத் கிப்ஃபாரீ [ரலி] அவர்கள் அறிவித் துள்ளார்கள்.

ரமழ்லான் மாதம் பிறந்து விடுமேயானால் சுவனத்தின் கதவுகள் திறந்து விடப்படுகின்றன; நரகின் வாசல்களனைத்

தும் மூடப்பட்டு விடுகின்றன; ஷைத்தான்களுக்கு விலங்கிடப்படுகின்றது — என அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அபூ ஹுரைரா [ரலி] அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

''ரமழ்லான் மாதம் பிறந்த இரவே அல்லாஹ் தன் படைப்புகளின் மீது நோட்டஞ் செலுத்துகிறான். எந்த அடியானின் மீது அவன் பார்வை படுகிறதோ அந்த அடியானை அவன் வேதனை செய்வதில்லை. இவ்வாறாக பல ஆயிரம் அடியார்கள் நரகிலிருந்து விடுதலை பெற்று விடுகிறார்கள் — என்றும் அண்ணலார் [ஸல்] அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அபூ ஹுரைரா [ரலி] அவர்களே அறிவித்துள்ளார்கள்.

''வேண்டுதல் புரிபவர் எவர்? நான் அவரின் வேண்டுதல்களை நிறைவேற்றுவேன். பச்சாதாபங் கொள்வோர் எவர்? நான் அவரின் பச்சாதாபத்தை அங்கீகரிப்பேன். பாவமன்னிப்பு கோருவோர் யார்? நான் அவரின் பாவங்களை மன்னிப்பேன். எவ்வித நெருக்கடியுமற்ற சீமானுக்கு கடன் கொடுக்க முன் வருபவர் உங்களில் எவர்? அந்தக் கடனை அவருக்கு நிரப்பமாகத் திருப்பித் தரப்படும். உங்களின் முதவீடு மோசம் போகாது-என அல்லாஹ் ரமழ்லான் மாதத்தின் ஒவ்வோர் இரவிலும் மும்முறை பிரகடனம் செய்வதாக, பெருமானார் [ஸல்] அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் இப்னு அப்பாஸ் [ரலி] அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

ஆய்வாளர்கள், அறிஞர்கள், மேதைகள், வேத ஞானிகள், இறைநேசச் செல்வர்கள், நபிமணித் தோழர்கள் என எண்ணிறந்த பேர் ஏட்டிலடக்கமுடியாத அளவுக்கு ரமழ்லான் மாதத்தின் சிறப்புகளை விவரித்துச் சென்றுள்ளார்களாயினும், அவை யாவற்றுக்கும் மணிமகுடமாக அல்லாஹ்வின் திருமறை அம்மாதத்தின் மகிமையைப் பறை சாற்றுகிறது :

شَهْرُ رَمَضَانَ الَّذِىٓ اُنْزِلَ فِيْهِ الْقُرْاٰنُ
هُدًى لِّلنَّاسِ وَبَيِّنٰتٍ مِّنَ الْهُدٰى وَالْفُرْقَانِ

''ரமழ்லான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய) தென்றால், அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டியாகவும், நேரான வழியைத் தெளிவாக்கக் கூடிய தாகவும், நன்மை தீமைகளைப் பிரித்தறிவிக்கக் கூடிய தாகவும் உள்ள திருக்குர்ஆன் அருளப்பட்டது — என்கிறது வேதமாமறை (2 : 185).

திருக்குர்ஆன் மட்டுமேயன்றி முந்திய வேதங்களும் ரமழ்லான் மாதத்திலேயே வழங்கப்பட்டதற்காதாரமான ஒரு நபிமொழியை ஹழ்லரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : ஹழ்லரத் இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு ரமழ்லான் மாதத்தின் மூன்று இரவுகளிலேயே ஸுஹுஃபுகள் — வேதக்கட்டளைகள் — வழங்கப்பட்டன. ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களுக்கும் ரமழ்லான் மாதத்தின் வெள்ளி இரவுகளிலேயே 'தவ்ராத்' வழங்கப்பட்டது. ஹழ்லரத் தாவூத் (அலை) அவர்கள்பால் ரமழ்லான் மாதத்தின் பதினெட்டாம் இரவில் 'ஜ்ஸபூர்' இறக்கப்பட்டது. ஹழ்லரத் ஈஸா (அலை) அவர்கள் பால் ரமழ்லான் மாதத்தின் பதிமூன்றாம் இரவில் 'இஞ்சீல்' இறக்கப்பட்டது...... என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இறைவனின் இறுதிப் பெருந்திரு வேதமாகிய குர்ஆன் இருபத்து மூன்றாண்டு கால இடைவெளியில் அவ்வவ்போது சன்னஞ் சன்னமாகவே இறக்கப்பட்டதாயினும், அண்ணலெம் பெருமான் [ஸல்] அவர்களின் நெஞ்ச கமலத்தில் சமர்ப்பிக்கப்படும் அப்பணி துவக்கப்படத் தெரிந்தெடுக்கப்பட்ட காரணத்தாலேயே ரமழ்லான் மாதம் மகத்துவம் பெற்று விட்டது என விளம்புகின்றது வேதமாமறை. அதன் பகல் இரவுகளிடையே பேதங் காண்பதற்கில்லை;

எந்தப் பகலையும் எந்த இரவையும் குறைத்துக் கணிப்பதற் கில்லை.

فَمَنْ شَهِدَ مِنكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ

''உங்களில் எவர் அம்மாதத்தை அடைகின் றாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும்'' என அம்மாதம் முழுமையாகவே தவ வாழ்க்கை மேற்கொள் ளப்பட வேண்டியதை மனிதர்கள் மீது கடமையாக்கி விட் டது அல்லாஹ்வின் அருள்மறை. [2 : 185]

மனிதன் தனக்கு அனுமதிக்கப்பட்ட உணவையும் பானத்தையும் வரையறுக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட காலத் துக்கு ஒதுக்கி, பசியையும் தாகத்தையும் சகித்து, மன இச்சைகளை அடக்கி உடலைத் தன்வயப்படுத்த மேற் கொள்ளும் பயிற்சியே நோன்பெனப்படுவது.

ஆதி மனிதர் ஆதம் (அலை) அவர்கள் முதற்கொண்டு உலகில் தோன்றி மறைந்த ஒரு நூறாயிரத்துக்கும் மேற் பட்ட நபிமார்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ள தென்பதை,

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ
عَلَى الَّذِينَ مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ

''விசுவாசிகளே! உங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது விதிக்கப்பட்டிருந்த பிரகாரமே உங்கள் மீதும் நோன்பு விதிக்கப்பட்டிருக்கிறது, (அதனால்) நீங்கள் பரிசுத்தவான்களாகலாம் — என சுட்டிக் காட்டுகிறது வேதமாமறை. [2 : 183]

''அல்லாஹ், ஹழ்ரத் ஆதம் [அலை] அவர்களை பூமிக்கு இறக்கியபோது கதிரவனின் வெப்பத்தால் அவர்

கள் உடல் தீய்ந்துக் கருத்து விட்டது. அச்சமயம் விண்ணவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஆதம் (அலை) அவர்களை அணுகி, ''உம் உடல் மீண்டும் வெண்மையாகி விட நீர் விரும்புகிறீரா?'' என வினவினர். ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் 'ஆம்' என்றார்கள். ''அப்படியானால் நீர் பதிமூன்றாம், பதினான்காம், பதினைந்தாம் பிறையுடைய நாட்களில் நோன்பிருப்பீராக'' என அவர்களை ஏவப்பட்டது. ஹழ்லரத் ஆதம் [அலை] அவர்கள் முதல் நாளன்று நோன்பிருந்தபோது அவர்களின் உடலில் மூன்றிலொரு பாகம் வெண்மையடைந்தது; இரண்டாம் நாள் நோன்பிருந்தபோது உடலின் மூன்றிலிரண்டு பாகம் வெண்மையடைந்தது; மூன்றாம் நாள் நோன்பிருந்தபோது அவர்களின் உடல் முழுவதும் முன்போலவே வெண்மையடைந்து விட்டது—என ஆதி மனிதர் ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் முதன் முதலாக நோன்பிருக்க ஏவப்பட்ட சம்பவத்தையும் 'அய்யாமுல் பைழ்ல் — வெண்மையுடைய நாட்கள்' என்ற பெயர்க் காரணத்தையும் ஹழ்லரத் அலீ [ரலி] அவர்கள் விளக்கக் கேட்டு 'அன்த்தரா' [ரஹ்] என்ற பெரியார் அறிவிக்கின்றனர்.

ஒவ்வொரு மாதத்திலும் 'அய்யாமுல் பைழ்ல்' எனப்படும் பதிமூன்றாம், பதினான்காம், பதினைந்தாம் பிறையுடைய நாட்களில் நோன்பு நோற்கும்படியாக ஹழ்லரத் நூஹ் [அலை] அவர்களின் காலத்திலிருந்தே கடமையாக்கப்பட்டிருந்ததாக ஹழ்லரத் மஆத், இப்னு மஸ்ஊத், இப்னு அப்பாஸ் [ரலி] போன்ற நபிமணித் தோழர்கள் அறிவித்துள்ளார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மதீனா வந்தடைந்த ஆரம்ப நாட்களில் 'ஆஷ¤ரா'வுடைய நாளிலும் ஒவ்வொரு மாதத்திலும் 'அய்யாமுல் பைழ்லு'டைய நாட்களிலும் நோன்பிருக்க முஸ்லிம்களுக்கும் கட்டளையிடப்பட்டிருந்தது. ரமழ்லான் மாதத்தில் நோன்பிருந்தேயாக

வேண்டிய கட்டளை வேதவசனமாகவே இறங்கிய பின்னர் முந்திய கட்டளையின்படியான நோன்புகள் நிர்ப்பந்திக்கப் படவில்லை என விரிவுரையாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

''ரமழ்லான் மாதத்தைக் கண்ணியப்படுத்திக் கொண்டிருக்கும் வரை என் சமூகத்தார் இழிவுபடுத்தப்பட மாட்டார்கள்'' என பெருமானார் [ஸல்] அவர்கள் கூறியபோது ஒரு தோழர் ''அல்லாஹ்வின் தூதரவர்களே! 'இழிவு' என தாங்கள் குறிப்பிடுவது எது?'' என வினவினார்.

''ரமழ்லான் மாதத்தில் தடுக்கப்பட்ட ஒரு காரியத்தைச் செய்தவனுடையவும், மற்றெந்த பாவத்தைச் செய்தவனுடையவும், மதுவருந்தியவனுடையவும் எந்த நோன்பும் ஏற்கப்பட மாட்டாது. மறு ஆண்டு வரை அல்லாஹ்வும் மற்ற விண்ணவர்களும் அத்தகையவனைச் சபித்துக் கொண்டே இருப்பர். அதற்கிடைப்பட்ட காலத்தில் அவன் மரித்து விட்டாலோ அவன் செய்த மற்றெந்த நன்மையான செயலும் ஏற்கப்படவே மாட்டாது — என பெருமானார் [ஸல்] அவர்கள் விளக்கினார்கள்.

மாமறையை மேதினிக்கு வழங்க தெரிந்தெடுக்கப்பட்ட மகத்துவமிக்க அம்மாதத்தின் வருகைக்கு முந்திய ஒரு பகலில் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் ஆற்றிய உரையை ஹழ்லரத் ஸல்மான் ஃபார்ஸீ [ரலி] அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

''மக்களே! மாண்பும் மங்களமும் சூழ்ந்த ஒரு மாதம் உங்கள் மீது நிழலிட நெருங்கிக் கொண்டிருக்கிறது. அம்மாதத்தில் ஓர் இரவு உள்ளது. அது ஆயிரம் மாதங்களையும் விட மேலானதாகும். அல்லாஹுத் தஆலா அம்மாதத்தில் நோன்பிருப்பதைக் கடமையாக்கி விட்டான். அதன் இரவுகளில் வணக்கம் புரிவதைச் சிறப்புடையதாக்கி விட்டான். இம்மாதத்தில் எவரேனும் அல்லாஹ்வின் பொருத்

தத்தையும் நெருக்கத்தையும் நாடியவராக — அவர் மீது விதியாக்கப்படாத — தம் பிரியப்படியான ஒரு நற்செயலை ஆற்றுவாராயின், அவருக்கு, அவர்மீது விதியாக்கப்பட்ட ஒரு கட்டளையை நிறைவேற்றியதற்குண்டான கூலியைப் போன்ற நற்பலன் கிட்டும். விருத்தி மிக்க இம்மாதத்தில் தம்மீது கடமையாக்கப்பட்ட ஒரு கட்டளையை நிறைவேற்றியதற்குண்டான கூலியை அவர் மற்ற நாட்களில் பெற்றுக் கொள்வதினும் எழுபது மடங்காகப் பெற்றுக் கொள்வார்.

''இது (பசி, தாகம், இச்சைகளை அடக்கி அல்லாஹ்வின் பாதையில்) பொறுமை(யில் உறுதி) கொண்டிருக்க வேண்டிய மாதமாகும்.

''இது (வறியவர்கள், எளியவர்களின் இன்ப துன்பங்களில் மற்றவர்கள் பங்கு கொள்ளும்) பரிவு நிறை மாதமாகும். நம்பிக்கையாளர்களின் உணவுகளில் இம்மாதத்தில் விருத்தி ஏற்படுத்தப்படுகிறது. ஒரு நோன்பாளியை நோன்பு திறக்கச் செய்தவரின் பிழை பொறுக்கப்படுகிறது. அவரின் பிடரி நரக நெருப்பை விட்டும் பாதுகாக்கப்படுகிறது. நோன்பாளிக்கு அவரின் நோன்புக்குப் பகரமாக வழங்கப்படும் நன்மைகளில் எந்தக் குறைபாடும் செய்யப்படாமலே அஃதே போன்ற நன்மை அவரை நோன்பு திறக்கச் செய்தவருக்கும் வழங்கப்படுகிறது — என்று பெருமானார் (ஸல்) அவர்கள் விவரித்துக் கொண்டிருக்கையிலேயே ஒருவர் குறுக்கிட்டு, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! அவ்வாறு நோன்பு திறக்கச் செய்ய எங்களில் ஒவ்வொருவரும் வல்லமை பெற்றில்லையே'' என குறைபட்டார்.

''ஒரேயோர் ஈத்தங்கனியைக் கொண்டாயினும் சரியே, ஒரேயொரு மிடர் பாலைக் கொண்டாயினும் சரியே அல்லது ஒரு மிடர் தண்ணீரைக் கொண்டாயினும் ஒருவரை நோன்பு திறக்கச் செய்தவரையும் கூட அல்லாஹ் அதற்குரிய தன் கூலியின் மூலம் அருள் பெறச் செய்வான். நோன்பாளியின்

பசித்திர உணவளிப்பவரை அல்லாஹ் என்னுடைய — ஹவ்ழ் ஹுல் -- 'கவ்ஃஸர் தடாகத்'திலிருந்து பருகச் செய்வான்— சுவனத்துள் நுழையும் வரை அவருக்குத் தாகமே ஏற்படாத வாறாக — என நபிபெருமான் (ஸல்) அவர்கள் விளக்கி னார்கள்.

1. ரமழ்லான் மாதத்தின் முப்பது நாட்களிலும் உண வையும் பானத்தையும் ஒதுக்கி இச்சைகளை அடக்கி நோன்பிருப்பது.

2. இரவு காலங்களில் விழித்திருந்து வணக்கம் புரிவது.

3. வறியவர்கள் எளியவர்களின் தேவைகளில் பங்கேற் பது.

4. நோன்பாளிகளின் பசி தீர்ப்பது — போன்றவையே ரமழ்லான் மாதத்தைக் கண்ணியப்படுத்துவது என்பதை பெருமானார் (ஸல்) அவர்களின் பேருரை சுட்டிக் காட்டு கிறது. இவற்றுள் தலையாயது நோன்பேயாகும். உடலை யும் உள்ளத்தையும் ஒருசேரப் பரிசுத்தப்படுத்தும் நோன்பு இஸ்லாத்தில் மூன்றாம் கடமையாக நிர்ணயிக்கப்பட் டுள்ளது.

''என் சமுதாயத்தினரின் நோன்பைத் தவிர்த்த மற்ற அத்தனை நற்காரியங்களுக்கும் உரிய கூலி பத்து மடங்கி லிருந்து எழுபது மடங்கு வரை பெருக்கித் தரப்படுகிறது. ஆனால் நோன்போ — என் அடியான் எனக்காகவே நோன் பிருந்தான். தன் உணவையும் பானத்தையும் எனக்காகவே அவன் ஒதுக்கினான். எனவே அதற்குரிய கூலியை நானே அவனுக்குத் தருவேன் — என அல்லாஹ் கூறுகிறான். நோன்பு (பாவத்திலிருந்து மனிதனைப் பாதுகாக்கும்) ஒரு கேடையமாகும். நோன்பாளிக்கு இரண்டு பூரிப்புகள் ஏற் படும். ஒன்று அவர் நோன்பு திறக்கையில். மற்றொன்று அவர் தம் இரட்சகனின் தரிசனத்தைப் பெற்றுக் கொள்கை யில் -- என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு

ஹழ்ரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

வணக்கங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியதாகவே இருந்தும் நோன்பை மட்டுமே அல்லாஹ் தனக்குரியதாகக் கூறியிருப்பது, பூமி முழுவதும் அல்லாஹ்வுக்கே சொந்தமாயிருந்தும் 'கஅபா'வை அவன் தன் வீடு என உவந்து கூறியதைப் போன்றதாகும் என இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

உணவையும் பானத்தையும் ஒதுக்கி பசியையும் தாகத்தையும் சகிப்பதும் இன்பங்களைத் துறப்பதுமான இந்த வணக்கமுறை அல்லாஹ்வுக்கும் அந்த அடியானுக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமாக இருக்கிறது. மற்ற வணக்கங்களைப் போன்று இது பிறரின் பார்வைக்குப் புலப்படுவதில்லை. ஆதமின் வழிவாறுகளை வழிகெடுத்தே தீருவேன் என்ற வைராக்கியத்தில் வெற்றி பெற ஷைத்தான் விரிக்கும் மாய வலையே மன இச்சை. அதனைத் துளும்பச் செய்பவை மிதமிஞ்சிய உணவும் பானமுமே. வணக்க வழிபாடுகளுக்கும் ஜீவாதாரமான அவற்றை அல்லாஹ் மனிதர்களுக்கு முற்றாகவே தடைசெய்திடவில்லை. அனுமதிக்கப் பெற்ற அவற்றைக் கண்முன்னே காணப் பெற்றிருந்தும் அல்லாஹ்வின் கட்டளைக்கு உட்பட்டவனாக அடியான் அவற்றைத் தீண்டாது மேற்கொள்ளும் பொறுமையை அவனுடைய ஈமானின் சரிபாதி என பெருமானார் (ஸல்) அவர்கள் உணர்த்துகிறார்கள்.

إِنَّمَا يُوَفَّى الصَّابِرُونَ أَجْرَهُم بِغَيْرِ حِسَابٍ ۝

"பொறுமையாளர் தங்களின் கூலியைக் கணக்கின்றியே அதிகமாகப் பெறுவார்கள்" என்பது இறைவனின் வாக்கு (அல்குர்ஆன்—39 : 10).

"என் அடியார்களே! நீங்கள் பொறுமையை மேற் கொள்ளுங்கள். (உண்ணுவதினின்றும் பருகுவதினின்றும்) பேணுதலைக் கடைபிடியுங்கள். நான் வெகு விரைவில் உங்களின் சிரமங்களை விலகச் செய்வேன். என் அருட் கோட்டையின் உப்பரிகையையே நீங்கள் அடைவீர்கள்— என அல்லாஹ் ரமழ்லான் மாதம் முழுவதும் அறிவித்துக் கொண்டிருப்பதாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர் கள் அறிவித்துள்ளார்கள்.

நோன்பாளியின் உறக்கமும் வணக்கமாகும். அவரின் மவுனமும் (தஸ்பீஹ்—எனப்படும்) துதியாகும். அவரின் வேண்டுதல் ஏற்கப்படும். அவரின் செயல்முறைகள் இரட்டிப் பான பலன்களைப் பெறுவன—எனவும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளதாக ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அவ்ஃபா (ரஹ்) அவர்கள் அறிவிக்கின்றனர்.

நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை இறை வனின் திருமுன் கஸ்தூரியின் மணத்தையும் விட உவப் பானது—என்றும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித் துள்ளார்கள்.

ரமழ்லானுக்காக சுவனம் ஆண்டு முழுவதும் அலங்கரிக் கப்படுகிறது. ரமழ்லானின் பிறை தோன்றிய அந்த இரவே 'அர்ஷ்' எனப்படும் மணி மண்டபத்தின் அடிவாரத்திலிருந்து 'மஷீரா' எனப்படும் தென்றல் வீசத் துவங்கி விடுகிறது. அது மரங்களின் இலைகளிலும் கதவுகளின் சங்கிலிகளிலும் பட்டு கலகலப்பை உண்டாக்குகிறது. எவரும் அதற்குமுன் எப்போதும் கேட்டிராத இனிய ஒலியைக் கேட்டு சுவனத்தின் கண்ணழகிகள் சுவனத் தாழ்வாரங்களில் வந்து வரிசை கட்டி நின்று, 'எங்களை மணமுடிக்க அல்லாஹ்விடம் கேட்க விரைபவர் யார்?' என அறைகூவி நிற்பர். பின்னர் அவர்கள் சுவனத்தின் அதிபதி 'ரிழ்ல்வானி'டம் 'இது எந்த

இரவு?' என வினவுவர். 'இது ரமழ்லான் மாதத்தின் முதலிரவு' என அவர்களுக்கு விடை கூறி 'ரிழ்ல்வான்' மேலும் கூறுவார்: அல்லாஹ்வின் கட்டளையின் பேரில் முஹம்மத் (ஸல்) அவர்களின் சமூகத்தவரின் நோன்பாளி களுக்காக இன்று சுவனத்தின் எல்லாக் கதவுகளும் திறந்து விடப்பட்டுள்ளன. நரகின் எல்லா வாயில்களையும் இன்று அடைத்து விட அதன் அதிகாரி 'மாலிக்' கட்டளையிடப் பட்டுள்ளார். நோன்பாளிகளுக்கு இடைஞ்சல் தரா மலிருக்க, உலகில் சென்று, தரிகெட்டலையும் ஷைத்தான் களைப் பிடித்து விலங்கிட்டு, கடலின் ஆழத்தில் மூழ்கடிக் கும்படி ஜிப்ரஈல் ஏவப்பட்டிருக்கிறார்—என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிக் கொண்டிருக்க நான் செவியுற்றேன்'' என ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித் துள்ளார்கள்.

ரமழ்லான் மாதத்தின் ஒவ்வொரு நாளிலும் நோன் பாளிகள் நோன்பு திறக்கும் சமயம் ஆயிரக்கணக்கான பாவிகள் நரகினின்றும் விடுதலை செய்யப்படுகின்றனர். ரமழ்லான் மாதத்தின் ஒவ்வொரு வெள்ளி இரவிலும் இலட் சக்கணக்கான பாவிகள் நரகினின்றும் விடுவிக்கப்படு கின்றனர். ரமழ்லான் மாதத்தின் இறுதி நாளன்றோ, அம்மாதத்தின் முதல் இரவிலிருந்து அன்று வரை எத்தனை பாவிகள் நரகிலிருந்து விடுவிக்கப்பட்டார்களோ அந்த எண்ணிக்கைக்குச் சமமான பேர் நரகிலிருந்து விடுதலை செய்யப்படுகின்றனர்—என்றும் அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள். நோன்பாளிகள் தங்களைப் பிரிந்து சென்று விட்ட தங்களின் முன்னோர்கள் உற்றார் உறவினர்களின் பிழைகள் பொறுக்கப்பட தாங்கள் நோன்பு திறக்கும் சமயங்களிலும் பிரார்த்திப்பது மிகப் பலன் தரக்கூடிய செயலாகும்.

"மூன்று பேர்களின் வேண்டுதல்களை அல்லாஹ் புறக் கணிப்பதே இல்லை என்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : (1) நோன்பாளி, அவர் நோன்பு திறக்கும்போது வைக்கும் வேண்டுதல் (2) நீதி மன்னன் சமர்ப்பிக்கும் வேண்டுதல் ஆகியவற்றுடன் மூன்றாவதாக அநீதியிழைக்கப்பட்டவரின் வேண்டுதல்—அல்லாஹ் அதனை மேகங்களுக்கு மேலாக உயர்த்தி விடுகிறான். விண்ணின் வாசல்கள் அதற்கு வழிவிட திறந்து விடப்படுகின்றன. 'நிச்சயம் உனக்கு உதவி செய்யப்படும்; தாமதத்திற்குச் சில காரணங்களுண்டு' என அவருக்குக் கூறப்படும்— என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

اَلصِّيَامُ جُنَّةٌ مَالَمْ يَخْرِقْهَا

"நோன்பு — அதனை முறித்துவிடாத வரை மனிதனுக்கு அது ஒரு கேடையமாகும் — என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அபூ உபைதா [ரலி] அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

"அல்லாஹ்வின் தூதரவர்களே! நோன்பு எதனால் முறிக்கப்படுகிறது?" என வினவப்பட்டபோது, பெருமானார் (ஸல்) அவர்கள், "பொய்யைக் கொண்டும் புறம் பேசுவதைக் கொண்டும்" என்றருளினார்கள்.

இதுவே நல்லடியார்களின் நோன்பு — இறையச்சமுடையோரின் நோன்பாகும்.

அறிவுலக மேதை இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் நோன்பை மூன்று வகையாகப் பிரித்தெழுதுகிறார்கள் :

1. பாமரர்களும் மேற்கொள்ளும் பொதுவானநோன்பு,
2. இறையச்சங் கொண்ட நல்லடியார்களின் நோன்பு,

3. இறைநேசச் செல்வர்களின் நோன்பு.

வெறும் உணவையும், பானத்தையும், உடல் இச்சையை யும் விலக்குவதன் மூலமே சாதாரண மனிதர்களின் நோன்பு நிறைவேறி விடும்; அவர்களின் உடல் நோய் நொடிகளை விட்டும் அவற்றையொத்த இடையூறுகளை விட்டும் பரிசுத் தப்பட்டு விடும். ஆனால்,

இறையச்சங் கொண்ட நல்லடியார்களின் நோன்பு இத் தகையதல்ல. அவர்களின் நோன்பு ஐந்து காரியங்களால் முறிந்து விடுகிறதென அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் எச்சரிக்கக் கேட்டு ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள். அவ்வைந்து காரியங்களாவன : 1. பொய் சொல்லுதல், 2. புறம் பேசு தல், 3. கோள் மூட்டுதல், 4. பெண்களை இச்சையுடன் பார்த்தல், 5. பொய் சத்தியம் செய்தல் ஆகியனவாம்.

''(புறம் பேசுவதன் மூலம்) மனிதர்களின் இறைச்சி யைத் தின்பவனுக்கு நோன்பு கிடையாது'' என பெருமா னார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

மன இச்சையுடன் ஒரு பெண்ணை அவளின் பின் புறத்தில் பார்த்தாலும் கூட நோன்பு முறிந்து விடும் என ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் எச்ச ரிக்கிறார்கள்.

''நீங்கள் நோன்பு நோற்பீர்களானால் அந்த நோன்பு உங்களின் கண்களுக்கும் செவிகளுக்கும் நாவுக்கும்தான் என்பதை மறந்து விடாதீர்கள். பொய்யை விட்டும், தடுக் கப் பட்டவற்றைப் பார்ப்பதை விட்டும், கேட்பதை விட்டும் உங்களைப் பேணிக்கொள்ளுங்கள். அண்டை அயலாருக்

ப—5

குச் சிரமம் தராதீர்கள். நிதானத்தையும் அமைதியையும் நிலை நிறுத்துங்கள். நோன்புடைய நாட்களை மற்ற சாதாரண நாட்களைப் போலவே பாவிக்காதீர்கள்—என்று நபிமணித் தோழர் ஹழ்லரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அறிவுறுத்துகிறார்கள்.

பசி, தாகம், உடலின்பம் ஆகியவற்றை விட்டும் பாது காத்துக் கொள்வதின்றி மனிதன் பாவங்களனைத்தையும் விட்டும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அப்போதே அவன் பரிசுத்தவானாக முடியும். நோன்பின் மூல தாத்பரியமே மனிதனைப் பரிசுத்தப்படுத்துவதே என்பதை மறை வசனம் [2 : 183] நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

"அநேக நோன்பாளிகள் இருக்கிறார்கள். பகலெல்லாம் பசித்திருந்ததையும் தாகித்திருந்ததையும் தவிர்த்து மற்றெந்தப் பயனையும் அவர்கள் பெற்றுக் கொள்வதில்லை. அநேக வணக்கவாளிகள் இருக்கிறார்கள். இரவெல்லாம் விழித்திருந்ததைத் தவிர்த்து மற்றெந்த பயனையும் அவர்கள் பெற்றுக் கொள்வதில்லை — என பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு சமயம் கூறினார்கள்.

மனிதர்களைப் பசித்திருக்கச் செய்வதைக் கொண்டும் தாகித்திருக்கச் செய்வதைக் கொண்டும் அல்லாஹ் எவ்விதத் தேவையுமற்றவன் என்றும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

எனவே, அல்லாஹ் ரமழ்லான் மாதத்தில் நோன்பிருப்பதை மனிதர்கள் மீது கடமையாக்கியதெல்லாம் அவர்களைப் பரிசுத்தப்படுத்தவேதான்; உடலால் மட்டுமின்றி உள்ளத்தாலும்தான்.

ஊனையும் உணவையும் ஏனோ தானோவென விழுங்கி இச்சை வயப்பட்டலைவது மிருக இயல்பு. அவற்றுக்கு எந்த வரையறையுமில்லை. மலக்குகள் அதற்கு நேர்மாறான

வர்கள். அவர்களுக்கு இச்சை என்பதில்லை. ஏனெனில் அவர்கள் உண்ணுவதில்லை; உறங்குவதில்லை.

لَا يَعْصُونَ اللّٰهَ مَآ اَمَرَهُمْ وَيَفْعَلُوْنَ مَا يُؤْمَرُوْنَ ۝

அல்லாஹ் அவர்களுக்கு ஏவியதில் (ஒரு சிறிதும்) மாறுதல் செய்யார்கள். அவர்கள் தங்களுக்கிடப்பட்ட கட்டளைகளையே செய்து வருவார்கள். (66 : 06) எனவே அவர்களைக் கொண்டு பாவங்களே விளைவதில்லை.

இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையிலேயே மனிதன் படைக்கப்பட்டிருக்கிறான். உண்ணவும் பருகவும் அவன் நிர்ப்பந்தப்பட்டிருக்கிறான். ஆசாபாசங்கள் அவனுள்ளே அமையப் பெற்றுள்ளன. மறதியும் சருகுதலும் அவனின் இயற்கைப் பலஹீனங்கள். இவை அத்தனையையும் தனக்கு சாதகங்களாக்கி—தன்னுடைய சாதனங்களாக்கி மனிதனை ஈனப்படுத்தி விடத் துடிக்கும் ஷைத்தானின் பிடியிலிருந்து மனிதனைக் காத்து, மிருகங்களின் நிலைக்கு அவன் தாழ்ந்து விடாது தடுத்து மலக்குகளின் நிலைக்கு அவனை உயர்த்த இறைவன் மேற்கொண்ட பரிவும் கருணையுமே நோன்பாகும்.

இச்சைகளுக்கு அவன் பணியாகி விடாமல் இச்சைகளை அவன் அடக்கியாள பெறும் வல்லமையே 'தக்வா'வென்னும் இறையச்சமாகும். அல்லாஹ் நாம் பேசுவதைக் கேட்கிறான்; நாம் செய்வதனைத்தையும் பார்க்கிறான்;

اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ ۝

பிடரியிலுள்ள உயிர் நரம்பை விடவும் நம்மைச் சமீபித்திருக்கிறான் (50 : 16)—என்ற உணர்வின் மூலமே 'தக்வா'வை மனிதன் தன்னுள்ளே வளரச் செய்ய முடியும். அவ்வாறான நிலையிலேயே அவன் பாவங்களை விட்டும் தப்பிக்க முடி

யும். இந்த முயற்சியின் மூலம் நோன்பென்னும் கேடை யத்தைப் பாதுகாத்துக் கொள்வோமாக.

## தராவீஹ் தொழுகை

ரமழ்லான் மாதத்தின் கண்ணியத்தைப் பேணும் அடுத்த செயல்முறை அதன் இரவுகளை நம்முடைய விழிப் பின் மூலம் உயிர் பெறச் செய்வதாம்.

'ரமழ்லான் மாதத்தின் பகலில் நோன்பிருந்து இரவில் விழித்திருந்து வணங்கும் வாலாயங்கொண்டவரின் முந்திய பிந்திய பாவங்களனைத்தையும் அல்லாஹ் மன்னித்து விடு கிறான்—என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள் ளார்கள்.

இதற்காகவே இரவின்—இஷா—தொழுகையைத் தொடர்ந்தே—ஜமாஅத்தாக ஒன்று கூடி 'தராவீஹ்' எனப்படும் மேலதிகமான தொழுகையை வாலாயமாக்கிக் கொண்டார்கள் நம் முன்னோர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் ரமழ்லான் மாதத்தின் முப்பது நாட்களிலும் இவ்வாறாகக் கூட்டுத் தொழுகை நடத்தாவிட்டாலும் மும்முன்றே நாட்கள் இரண்டு முறை நடத்தி ஒரு முன்னுதாரணத்தைக் காட்டிச் சென்றார்கள் தங்கள் தோழர்களுக்கு.

"ஒரு நாளிரவு பெருமானார் (ஸல்) அவர்கள் தங் களின் இல்லத்திலிருந்து வெளிப்பட்டு பள்ளியில் வந்து தொழுகை நடத்தினார்கள். அவர்களின் பின்னே நின்று சில தோழர்களும் தொழுதார்கள். மறு நாள் காலை இச்செய்தி மக்களிடையே பேசப்பட்டது. (அடுத்த இரவில்) இன்னும் அதிகமான பேர் அண்ணலார் (ஸல்) அவர்களுடன்

தொழுகையில் கலந்து கொண்டார்கள். மறு பகலிலும் இச் செய்தி மக்களிடையே அதிகமாகப் பேசப்பட்டது. மூன்றாம் இரவிலும் மக்கள் அதிகமாகக் கூடினர். அன்றும் பெருமானார் (ஸல்) அவர்கள், வீட்டிலிருந்து வந்து பள்ளியில் தொழுதார்கள். அவர்களோடேயே தோழர்களும் தொழுதார்கள். நான்காம் இரவில் பள்ளியில் இடம் போதாத அளவுக்கு மக்கள் கூடி விட்டார்கள். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்கள் (விடியும் கால) ஸுப்ஹுத் தொழுகைக்கே பள்ளிக்கு வந்தார்கள். 'பஜ்ரை'த் தொழுது முடித்து, தங்களின் தோழர்களை நோக்கித் திரும்பிய அண்ணலார் (ஸல்) அவர்கள் 'உங்களின் நிலை எனக்குத் தெரியாததாக இல்லை. எனினும் இது உங்கள் மீது கடமையாக்கப்பட்டு அதனை நிறைவேற்ற இயலாதவர்களாக நீங்கள் தங்கடப்பட நேருமோ என நான் அஞ்சினேன்' என்றார்கள்—என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அன்னையாரவர்களின் அறிவிப்பின் முடிவில் 'விஷயம் இவ்வாறான நிலையில் பெருமானார் (ஸல்) அவர்கள் எங்களைப் பிரிந்து சென்றார்கள்' என காணப்படும் ஒரு சொற்றொடர், இந்தச் சம்பவம் அண்ணலார் (ஸல்) அவர்களின் இம்மை வாழ்வின் இறுதி ஆண்டில் நடந்ததாகத் தெரிவிக்கிறது.

துறவிப் பெருந்தோழர் ஹழ்லரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ள மற்றொரு செய்தியும் திர்மதீ, அபூதாவூத், நஸாயீ ஆகிய தொகுப்புகளில் காணக் கிடைக்கிறது.

''பெருமானார் (ஸல்) அவர்களோடு நோன்பிருந்த நாட்களில் அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்தவில்லை. (ஒரு ரமழ்லான் மாதத்தின்) ஏழு நாட்கள் மீதமிருந்தபோது எங்களோடு நின்ற அவர்கள் இரவின் மூன்றி

லொரு பகுதி கழியும் வரை தொழுகை நடத்தினார்கள். மறு இரவு அவர்கள் வரவில்லை. (ரமழ்லான் மாதத்தின் ஐந்து நாட்களுக்கு முந்திய) அடுத்த இரவில் (எங்களோடு அவர்கள் தொழ நின்றதில்) பாதி இரவு கழிந்து விட்டது. 'அல்லாஹ்வின் தூதரவர்களே! எஞ்சியுள்ள இரவின் பாகத்திலும் எங்களுக்குத் தொழுகை நடத்திடில் நலமே' என நாங்கள் விழைந்தபோது, 'தொழுகையிலிருந்து 'இமாம்' விடுபடும்வரை அவரின் பின்னே நின்றிருந்தவருக்கு முழு இரவும் அவர் தொழுததற்கான நன்மை எழுதப்படுகிறது' என அருளினார்கள். அதற்கடுத்து அவர்கள் தொழுகை நடத்தவில்லை. மூன்று நாட்கள் எஞ்சியிருந்த இரவில் தங்கள் குடும்பத்தினரையும் அழைத்துக் கொண்ட அவர்கள் எங்களிடையே—எங்களின் வெற்றிப் பொருள்கள் தப்பி விடுமோ என நாங்கள் அஞ்சும்படியாக தொழுகை நடத்தினார்கள்—என அறிவித்த ஹழ்லரத் அபூதர் (ரலி) அவர்களிடத்தில் 'வெற்றிப் பொருள்கள்' என தாங்கள் எதனைக் குறிப்பிடுகிறீர்கள்? என வினவப்பட்டபோது அவர்கள் 'ஸஹ்ரின் உணவு' என்றார்கள்.

அன்னையாரவர்கள் தங்களின் அறிவிப்பில் தொடர்ச்சியான மூன்று இரவுகளைக் குறிப்பிடுகிறார்கள். ஹழ்லரத் அபூதர் (ரலி) அவர்களின் அறிவிப்பில் ஒரு நாள் இடைவிட்டு ஒரு நாளாக மூன்று இரவுகள் இடம் பெறுகின்றன. இந்த வேறுபாடுகள் இரு சம்பவங்களும் வெவ்வேறான வருடங்களில் நடைபெற்றதைத் தெரிவிக்கின்றன. ஆக அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் வாழ்க்கையில் இரண்டே ரமழ்லான் மாதங்களில் மும்மூன்று நாட்களாக ஆறு நாட்களே பகிரங்கமாகத் தங்கள் தோழர்களுக்கு பள்ளியில் தொழுகை நடத்திப் பிரிந்தார்கள் என்றாலும் கூட, நன்மைகளைக் கொள்ளை கொள்வதிலேயே குறியாக இருந்த தோழர்களுக்கு அந்த முன்னுதாரணங்களே பற்றிப் பிடித்துக் கொள்ள போதுமானவையாயிருந்தன.

"எம்பெருமான் (ஸல்) அவர்கள் ரமழ்லான் மாதங்களில் தனியே நின்று இருபது ரக்அத்துகள் தொழுபவர்களாயிருந்தார்கள். அதன்பின் அவர்கள் வித்ரு தொழுதார்கள்—என ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஒன்றுவிட்ட இளவலாக மட்டுமின்றி அன்னை மைமூனா (ரலி) அவர்களின் உடன் பிறந்த சகோதரியின் மகனாகவும் இருந்தார்கள். எனவே அவர்கள் மைமூனா (ரலி) அவர்களின் இல்லத்திலேயே தங்கிவிட அவர்களுக்கு எந்தத் தடையுமில்லாதிருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்வையும் வாக்கையும் கூர்ந்தறிந்து பேணும் ஆர்வம் மிகக் கொண்டிருந்த அவ்விளந் தோழர் இரவு காலங்களில் அண்ணலார் (ஸல்) அவர்கள் விழித்தெழுந்து தொழும்போது தாங்களும் விழித்தெழுந்து அவர்களோடிணைந்து கொள்ளும் வாய்ப்பையும் எளிதாகவே பெற்றிருந்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்களின் காலத்திலேயே ஹழ்லரத் இப்னு அப்பாஸ் [ரலி] அவர்களின் அறிவிப்புகள் கண்ணியத்துடன் பிற தோழர்களால் செவியேற்கப்பட்டு வந்தன. கலீஃபா உமர் (ரலி) அவர்களோ ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்துக்களுக்கு பல முதிய ஸஹாபாக்களின் கருத்துகளுக்கும் மேலாக மதிப்பளித்தார்கள். இவற்றோடன்றி,

"பெருமானார் (ஸல்) அவர்கள் ரமழ்லான் மாத இரவுகளில் நின்று தொழுவது பற்றி எங்களுக்கு அறிவுறுத்தி வந்தார்கள். ஆனால் அவர்கள் அதனை அவசியமானதாய் எங்களை நிர்ப்பந்திக்கவில்லை. எனினும் அவர்கள் உறுதியான நம்பிக்கையுடன் அல்லாஹ்வுக்காகவே ரமழ்லான் மாதத்தில் தொழுகைக்காக நின்றவரின் முந்திய பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடுவதாக அருளியுள்ளார்கள்—

என்று ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

நாயகப் பெருமான் (ஸல்) அவர்களின் நன்மாராயங்களைச் செவியுற்ற தோழர்கள் தனித் தனியாகவோ குழுக்களாக இணைந்தோ ரமழ்லான் மாதத்தின் இரவு காலங்களில் இஷாத் தொழுகையைத் தொடர்ந்து மேலதிகமாகத் தொழுவதை வாலாயமாக்கிக் கொண்டார்கள். அந்த வாலாயம் பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் பிரிவுக்குப் பின்பும் கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் காலத்தின் போதும், ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின் ஆரம்ப காலத்திலும் மாறாது தொடர்ந்தது.

''உமர் இப்னுல் கத்தாப் (ரலி) அவர்களோடு பள்ளி சென்ற நான் அங்கே மக்கள் குழுக்குழுக்களாக நின்று தொழுது கொண்டிருக்கக் கண்டேன். சிலர் தனித்தனியே தொழுது கொண்டிருந்தனர். சிலர் தங்களின் (ஓதும்) காரீயின் பின்னே நின்று தொழுத வண்ணமிருந்தனர். அதனைக் கண்ட உமர் (ரலி) அவர்கள் இவர்களனைவரையும் ஒரே காரீயின் பின் நின்று தொழச் செய்வதே சரியென நான் நினைக்கிறேன் என்றார்கள். அவர்களின் எண்ணம் வலுப்பட்டபோது மக்களனைவரையும் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களின் பின்னே ஒன்று கூடச் செய்தனர் — என ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அப்துல் காரீ [ரலி] அவர்கள் அறிவிக்கின்றனர்.

கலீஃபா உமர் [ரலி] அவர்களின் காலத்தின் ரமழ்லான் மாதங்களில் பள்ளிகள் ஒளி விளக்குகளால் அலங்கரிப்பட்டன. ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களின் பின்னே ஆண்களும் ஹழ்லரத் தமீம்தாரீ (ரலி) அவர்களின் பின்னே பெண்களும் கூட்டங் கூட்டமாக நின்று தொழலானார்கள். அந்தக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தவர்களாக ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள்,

نَوَّرَ اللّٰهُ قَبْرَ عُمَرَ كَمَا نَوَّرَ مَسَاجِدَ اللّٰهِ تَعَالٰى بِالْقُرْاٰنِ

''திருக்குர்ஆனைக் கொண்டு அல்லாஹ்வின் பள்ளிகளை ஒளி பெறச் செய்த உமர் (ரலி) அவர்களின் மண்ணறையை அல்லாஹ் ஒளி பெறச் செய்வானாக'' என வாழ்த்தினார்கள்.

''இறைவனின் 'அர்ஷ்' எனப்படும் மணி மண்டபத்தின் மருங்கே 'ஹழ்லீரத்துல் குதுஸ்'' எனப்படும் பரிசுத்தத் தலம் ஒன்றுள்ளது. ஒளிமயமான அத்தலத்தில், அல்லாஹ் ஒருவனைத் தவிர மற்றெவருமே அறியாத எண்ணிக்கையளவு விண்ணவர்கள் உள்ளார்கள். கணப்பொழுதும் மாறாமல் அவர்கள் வணக்கத்திலேயே ஆழ்ந்துள்ளார்கள். ரமழ்லான் மாதம் பிறந்திடுமானால் அதன் இரவுகளில் பூமிக்கு வர அம்மலக்குகள் இறைவனிடம் அனுமதி கேட்கிறார்கள். அவ்வாறாக பூமிக்கு வரும் அவர்கள் ஆதமுடைய மக்களோடு சேர்ந்து தொழுகையில் கலந்து கொள்கிறார்கள். 'உம்மத்தே முஹம்மதிய்யா' எனப்படும்—பெருமானாரின் சமுதாயத்தைச் சேர்ந்த எவருடைய உடல் அவர்களோடு உரசப் பெறுகிறதோ அவர் அதற்குப் பின் எப்போதுமே வழி கேட்டின் புறம் திரும்பி விடாதபடி சிலமை பெற்று விடுகிறார்—என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறிய செய்தியை நான் கூறக் கேட்ட கலீஃபா அவர்கள், 'இத்தகைய பெருமைக்குரிய தொழுகைக்கு நாமே அதிகமாக உரிமை படைத்தவர்கள்' என பூரித்தார்கள் — என்று ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள்.

அல்லாஹ் தன் தூதரின்சமூகத்தினருக்காக கலீஃபா உமர் [ரலி] அவர்களின் இதயத்தை விரியச் செய்தான். பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் பிரிவுக்குப்பின் அவர்களின் மார்க்கத்தையே நிலை பெறச் செய்த இரண்டாம் நிர்மாண கர்த்தா கலீஃபா உமர் (ரலி) அவர்கள்.

إِنَّ اللهَ جَعَلَ الْحَقَّ عَلَى لِسَانِ عُمَرَ وَقَلْبِهِ

''அல்லாஹ் உமருடைய நாவிலும் இதயத்திலும் சத்தியத்தை இறக்கி விட்டான்'' என அருளிய பெருமானார் (ஸல்) அவர்கள், தங்களின் அத்தோழரின் பிந்திய சாதனைகளை நபித்துவத் தொலை நோக்கால் கண்டே,

لَوْ كَانَ بَعْدِي نَبِيٌّ لَكَانَ عُمَرَ

''நபித்துவம் என்னோடு முற்றுப் பெறாதிருக்குமானால் உமர் (ரலி) நபியாகத் தகுதி படைத்தவரே'' என புகழ்ந்தார்கள்.

நபிமார்களின் கனவுகளும் அவர்களுக்கு மெய்யான முன்னறிவிப்புகளாகும். ''கனவில் நான் பாலருந்தினேன், அந்தப் பாலின் மணத்தை என் நகக் கண்களிலும் நான் உணர்கிறேன். மீந்து விட்ட பாலை நான் உமரிடம் தந்து விட்டேன்—என்றுரைத்த பெருமானார் (ஸல்) அவர்களிடம் 'அந்தப் பால் யாது?' என தோழர்கள் கேட்டபோது, அண்ணலார் (ஸல்) அவர்கள் 'கல்வி' என்றார்கள்.

''கனவில் நான் சிலரைக் கண்டேன். அவர்களில் சிலர் தங்களின் மார்பு வரையிலும் சிலர் அதற்குச் சற்றுத் தாழாகவும் சட்டைகள் அணிந்திருந்தார்கள். உமருடைய மேலாடையோ தரையில் இழுபடுமளவு நிரப்பமாக இருந்தது—என ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். 'அந்த மேலாடை குறிப்பதென்ன?' என தோழர்கள் வினவினர். நபிபெருமான் (ஸல்) அவர்கள் 'மார்க்கம்' என்றார்கள்.

إِنِّي لَا أَدْرِي مَا بَقَائِي فِيكُمْ فَاقْتَدُوا بِالَّذَيْنِ مِنْ بَعْدِي
أَبُو بَكْرٍ وَعُمَرَ

''உங்களிடையே நான் இன்னும் எத்தனை காலம் இருப்பேன் என்பதை நான் அறியேன். எனக்குப் பின்னர் நீங்கள் அபூபக்கர், உமர் (ரலி) ஆகியோரின் வழிகளைப் பின்பற்றுங்கள்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் தங்க ளின் பிந்திய காலத்தில் கூறக் கேட்டு ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களைப் பிரிந்த உலகில், அவர் களின் பிரிவுக்காகவே காத்திருந்து, தடம் புரண்ட சந்தர்ப் பவாதிகள், சந்தேகப் பிறவிகள், சமுதாயச் சழக்கர்களைச் சமாளிக்கவே கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் வாழ் நாள் போதுமாயிருந்தது. அத்தகைய பேராபத்தான தரு ணத்திலும் உமர் [ரலி] அவர்களின் தீட்சண்யம் உம்மத்தே முஹம்மதிய்யாவின் மறுமைப் பெருவாழ்வுக்கான தீன் நெறிக் கோட்டையை நிலைபெறச் செய்வதில் கவனமாயிருந்தது.

يَا ابْنَ الْخَطَّابِ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ مَا لَقِيَكَ الشَّيْطَانُ
سَالِكًا فَجًّا قَطُّ إِلَّا سَلَكَ فَجًّا غَيْرَ فَجِّكَ

''என்னுடைய ஆன்மாவைத் தன் வசம் கொண்டுள்ள வல்லமையின் மீது சத்தியமாக, உமரே! நீர் செல்லும் பாதையிலிருந்து ஷைத்தான் விரண்டோடுகிறான் — என பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்த்திய பாக்கியத்தால் உமர் [ரலி] அவர்கள் வாழ்ந்த காலம் வரை ஷைத்தானிய வாதங்கள் தலை தூக்கவில்லை. பெருமான் நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் தங்களின் ஆன்மீக தூர நோக்கால் அறிவுக்கு அணை கட்டி வாழ்ந்தார்கள். அதன் பெரும் பலனே இன்று நாம் பெற்று பேணும் திருக்குர்ஆன். தோல் களிலும் எலும்புத் துண்டுகளிலும் பதியப்பட்டு பல நூறு தோழர்களிடம் சிதறியிருந்த வேத வசனங்களை ஒன்று சேர்க்க ஹழ்லரத் உமர் [ரலி] அவர்கள் எண்ணங் கொண்ட

போது பெருமானார் (ஸல்) அவர்கள் செய்யாத காரியத்தை நாம் செய்வதா என்ற தயக்கம் கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்களுக்கே ஏற்பட்டது. அப்பணியை மேற் கொள்ள அழைக்கப்பட்ட மாநபியின் தோழர் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு ஃஸாபித் அவர்களுக்கும் ஏற்பட்டது என்றாலும் அதன் அவசியத்தை உமர் [ரலி] அவர்கள் விளக்கியபோது கலீஃபா அவர்களும் ஏற்றார்கள். 'அதை விட ஒரு மலையைச் சுமக்க என்னை ஏவியிருந்தால் அது எனக்கு எளிதாயிருக்கும்' என தங்களின் ஆதங்கத்தை வெளியிட்ட ஹழ்லரத் ஃஜ்ஸைத் இப்னு ஃஸாபித் (ரலி) அவர்கள் மனம் கனக்க அப்பணியை நிறைவுபடுத்தியதன் பலனன்றோ இன்று வேதமாமறையை ஒரு நூலுருவில் உலகம் பெற்றிருப்பது! சற்றே காலந்தாழ்ந்திருந்தாலும் கூட முந்திய வேதங்களுக்கேற்பட்ட கதியே திருக்குர்ஆனுக்கும் ஏற்படுவதை எங்ஙனம் தவிர்த்திருக்க முடியும்?

إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ ○

''நிச்சயமாக நாமே இவ்வேதத்தை [உம்மீது] இறக்கினோம். நிச்சயமாக அதனை நாமே பாதுகாப்போம்.'' (15 : 09) என பொறுப்பேற்ற வல்லவனே உமர் [ரலி] அவர்களின் நெஞ்சத்தை இந்த சமூகத்துக்காக விசாலமடையச் செய்தான். ஒரு நபித்துவத் திண்மையோடு உமர் [ரலி] அவர்கள் அல்லாஹ்வின் திருமறையை முழுநூலுருவிலாக்கிட காரணமாக நின்றார்கள்.

வேத நாயகர் பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் உலகில் வாழ்ந்த காலமெல்லாம் ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களிடத்தில் பொருத்தங் கொண்டவர்களாகவே இருந்தார்கள். கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்களும் தங்களின் வாழ்நாளெல்லாம் உமர் [ரலி] அவர்களிடத்தில் பொருத்தங் கொண்டவர்களாகவே இருந்தார்கள். தமக்குப்பின்

கிலாஃபத்தை உமர் [ரலி] அவர்களிடத்தில் ஒப்படைத்த கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்கள், 'இது பற்றி அல்லாஹ் என்னைக் கேட்பானாயின், 'இறைவனே! உன் அடியார்களில் மிகச் சிறந்தவராக எவரை நான் கண்டேனோ அவரிடமே பொறுப்பை ஒப்படைத்தேன்' என்று கூறுவேன் — என மரணப்படியில் ஏறி தாங்கள் நின்றிருந்த தருணத்திலேயே துணிந்து கூறினார்கள்.

مَا طَلَعَتِ الشَّمْسُ عَلَىٰ رَجُلٍ خَيْرٍ مِنْ عُمَرَ

'மனிதர்களில் உமரைவிடச் சிறந்த எவருக்காகவும் கதிரவன் உதிக்கவில்லை—என பெருமானார் (ஸல்) அவர் கள் கூறத் தாம் கேட்டதாக கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள். அத்தகையவர் மக்களின் தலைமையை ஏற்றுச் சிறந்த பத்தரை ஆண்டுகால நெடு வாழ்வில் மாநபியின் தோழர்கள், அவர்களைத் தொடர்ந்த வர்கள் அத்தனை பேருமே கலீஃபா உமர் (ரலி) அவர்களின் நடவடிக்கைகளில் பொருத்தங் கண்டார்கள்.

மக்களின் காவலரென தங்களின் பொறுப்பை உணர்ந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் மக்களின் மறுமைப் பெரு வாழ்வுக்குத் தேவையான அனைத்தையும் அவர்களின் இம்மைச் சமவெளியில் விளைவித்துச் சேர்த்திட தங்களா லான அத்தனை முயற்சிகளையும் செய்து முடித்தார்கள். அவற்றில் ஒன்றே 'தராவீஹ்' எனப்படும் ரமழ்லான் மாத இரவுகளின் கூட்டுத் தொழுகை.

திருக்குர்ஆனை ஓதும் காரீகளில் திறன் படைத்தவ ராக விளங்கிய மாநபித் தோழர் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களையழைத்து கலீஃபா அவர்கள் கூறி னார்கள், ''பொதுவாக மக்கள் நோன்பிருக்கிறார்கள். ஆனால், திருக்குர்ஆனை அவர்கள் நினைக்கிறார்களில்லை.

நீர் அதனை தராவீஹின் போது ஓதினீரானால் மக்கள் அதனைச் செவியுறுவார்களே'' என்று.

''அமீரல் முஃமினீன்! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் காலத்தில் அப்படிச் செய்யப்படவில்லையே—என ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] வினவினர்.

''ஆம்! அதனை நானும் அறிவேன். எனினும் இது மிக்க நன்மையாக்கும் செயலாகவே உள்ளது'' என கலீஃபா அவர்கள் தெரிவித்த பின்னர் மறுசொல் கூறவில்லை மாநபியின் தோழர்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களின் பிரிவுடன் வேதக் கட்டளைகள் விண்ணிலிருந்து இறங்குவது நிறைவு பெற்று விட்டது. மார்க்கமும் பூரணத்துவம் பெற்று இறைவனால் அங்கீகரிக்கப்பட்டு விட்டது. பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பின் இனி எந்த நபியும் தோன்றப் போவதில்லை. எனவே இனி எந்தப் புதிய நடவடிக்கையும் தங்கள் மீது கடமையாக்கப்பட்டு விடுமோ — அதுவே பிந்திய வழிவாறுகளுக்குத் தங்கடமாகி விடுமோ என்ற அச்சம் இப்போது ஏற்பட வழியேயில்லை. எனவே மாநபி (ஸல்) அவர்களின் தோழர்கள் நல்லவை என தாங்கள் கண்ட வழிமுறைகளில் கருத்தொருமித்தார்கள். அவர்களின் ரமழ்லான் மாத இரவுகள் சாகாவரம் பெற்றன; மக்களின் இதயங்கள் ஜீவன் பெற்றன. இந்த நடைமுறையில் பின்னர் கிலாஃபத்தை ஏற்ற நாயகத் தோழர்களான ஹழ்லரத் உஃஸ்மான், அலீ (ரலி) ஆகியோரும் பொருத்தங் கண்டனர். தீனை வழிப்படுத்திய நான்கு இமாம்களும் பொருத்தங் கண்டனர். இன்றைய நாளுக்கிடைப்பட்ட பதினைந்து நூற்றாண்டு கால இடைவெளியில் தோன்றிய நல்லோர், ஆன்ம ஞானம் மிகுந்த வல்லோர் எல்லோருமே பொருத்தங் கண்டு வருகின்றனர்.

நாள் முழுவதும் பசித்து நோன்பிருப்பதால் காய்ந்துக் கருகிய குடலில் உணவின் ஈரம் பட்டதுமே விளையும் இயற்கையான களைப்பையும் விலக்கச் செய்யும் உடற் பயிற்சியாகவும் அனுபவ பூர்வமாக உணரப் பெறும் இந்த சுன்னத்தான தொழுகையை நாம் பூரணமாகப் பேணிட வேண்டும்.

'முஅக்கதா' வான அவசிய சுன்னத்துகளையும் நீக்கி நம்மீது நாளொன்றுக்கு 'பர்ழ்லா' கவே கடமையாக்கப்பட்டுள்ள தொழுகை பதினேழு 'ரக்அத்' துகளாகும் (சுபுஹூ-2, லுஹர்-4, அஸர்-4, மக்ரிப்-3, இஷா-4). வாஜிபாக்கப்பட்டுள்ள 'வித்ரு' தொழுகை மூன்று ரக்அத்துகளாகும். ஆக இந்த இருபது ரக்அத்துகளில் நம்முடைய இயல்பிலேயே அமைந்துள்ள மறதியின் காரணமாகவோ, நோன்பினால் ஏற்படும் அசதியின் காரணமாகவோ ஏற்பட்டு விடக்கூடிய சருகுதல்கள்ளயும், பிசகுதல்களையும் ஈடு செய்யவே இந்த மேலதிகமான தொழுகையை இருபது ரக்அத்துகளாக நிர்ணயித்துள்ள முன்னோர்களின் மேதையை எகத்தாளத்தால் புறக்கணிக்கும் துர்ப் பேறாளர்களின் வரிசையில் நாம் அங்கம் பெற வேண்டாம்.

இதனையடுத்தது பின்னிரவுத் தொழுகை. தராவீஹ் தொழுகைக்குப் பின் உறக்கத்தின் மூலம் உடலுக்குச் சிறிது ஓய்வு தந்து மீண்டும் விழித்தெழுந்து தொழுவதே பின்னிரவுத் தொழுகை.

"(மற்றும்) ஓர் இரவு உமர் (ரலி) அவர்களுடன் பள்ளிக்குச் சென்றேன். மக்கள் அனைவரும் (குர்ஆனை ஓதிக் கொண்டிருந்த)ஒரே காரீயின் பின் நின்று தொழுதுக் கொண்டிருந்தார்கள். அதனைப் பார்த்த உமர் (ரலி) அவர்கள் "பித்அத் (எனப்படும் புதினங்)களில் இது மிக நல்லது' என்றார்கள். பின்னர் "எந்தத் தொழுகையை விட்டும் நீங்கள் உறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறீர்களோ அந்தத் தொழுகை

(இரவின் முற்பகுதியின்) தொழுகையை விட மேலானதாகும்'' என்றும் (கலீஃபா அவர்கள்) கூறினார்கள். (அக்காலத்தில் மக்கள் இரவின் முற்பகுதியில் தொழுதுவிட்டு பிற்பகுதியில் உறங்குபவர்களாயிருந்தார்கள்) — என ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அப்துல் காரீ [ரலி] அவர்களே அறிவித்துள்ளார்கள்.

ஓய்ந்து உறக்கத்தின் அணைப்பில் தஞ்சம் புகுந்திட்ட பின் மீண்டும் அதனை உதறி, தொழுகைக்காக எழுவது பெரும் பாரமான செயலாகவே இருக்கலாம். ஆனால்,

பரமனின் திருமுன் தங்களின் பாவங்களுக்குக் கழுவாய் தேடி உருகி நின்ற உத்தமர்கள், அமைதி ஆதிக்கங் கொண்டிலங்கும் அந்த நள்ளிரவில் கிடைத்த மன ஓர்மையில் பத்திலொரு பங்கையும் கூட பகல் காலங்களில் தாங்கள் பெற்றுக் கொள்ள முடிந்ததேயில்லை என்கிறார்கள்.

إِنَّ نَاشِئَةَ اللَّيْلِ هِيَ أَشَدُّ وَطْئًا وَأَقْوَمُ قِيلًا ۝

''நிச்சயமாக இரவில் விழித்திருப்பது ஆத்மாவைப் பழக்கி (அடக்கி வைப்பதுடன்) எதனையும் மனம், வாக்கு ஒத்து கூறும்படி செய்கிறது —என இறைவனின் திருமறையும் (73 : 06) சிந்திய இரவின் வணக்கத்தின் பலனைச் சித்தரிக்கிறது.

يَا أَيُّهَا الْمُزَّمِّلُ ۝ قُمِ اللَّيْلَ

''போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே (—நபியே!) இரவில் நீர் (தொழுகைக்காக எழுந்து) நில்லும்—என பெருமானார் (ஸல்) அவர்கள் இறைவனாலேயே (73 : 01) ஏவப்பட்டார்கள். எனவே பெரு

மானார் (ஸல்) அவர்கள் 'தஹஜ்ஜுத்' எனப்படும் அத் தொழுகையைத் தங்கள் மீது கடமையாகவே ஆக்கிக் கொண்டார்கள்.

اِلَّا قَلِيلًا ۝ نِصْفَهٗۤ اَوِ انْقُصْ مِنْهُ قَلِيلًا ۝ اَوْ زِدْ عَلَيْهِ

''(முழு இரவிலுமல்ல; அதிலொரு) சொற்ப பாகம். (அதாவது:) அதில் பாதி (நேரம்), அதிலும் நீர் சிறிது குறைத்துக் கொள்ளலாம்; அல்லது அதில் சிறிது கூட்டியுங்கொள்ளலாம்—என இறைவனின் கருணை காட்டிய கனிவைப் புலப்படுத்துகிறது வேத மாமறை (73 : 2 to 4). ஆனால்,

وَمِنَ الَّيْلِ فَتَهَجَّدْ بِهٖ نَافِلَةً لَّكَ ۖ عَسٰۤى اَنْ يَّبْعَثَكَ رَبُّكَ مَقَامًا مَّحْمُوْدًا ۝

''தஹஜ்ஜுத்' தொழுகையை நீர் நஃபிலாக இரவில் ஒரு பாகத்தில் தொழுது வருவீராக. (அதன் பாக்கியத்தால் 'மக்காமம் மஹ்மூத்' எனப்படும்) மிக்க புகழ் பெற்ற ஸ்தானத்தில் உம் இறைவன் உம்மை அமர்த்தலாம்'' என்ற (17 : 79) நன்மாராயத்தால் ஆன்மீக தாகம் அதிகரிக்கப் பெற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் பின்னிரவின் தொழுகையைப் பேணிய பாங்கை அருள் மனச் செல்வியார் அன்னை ஆயிஷா நாயகியார் [ரலி] அவர்கள் விவரிக்கிறார்கள்.

''ரமழ்லானிலும் [ரமழ்லானல்லாத] மற்ற நாட்களிலும் பெருமானார் [ஸல்] பதினோரு 'ரக்அத்'கள் தொழுவார்கள். முதலில் நான்கு 'ரக்அத்'கள் தொழுவார்கள். அவற்றின் அழகைப் பற்றியும் நீளத்தைப் பற்றியும் வினவவே வேண்டாம். பிறகு நான்கு 'ரக்அத்'கள் தொழுவார்கள். அவற்றின் அழகைப் பற்றியும் நீளத்தைப் பற்றியும் கேட்கவே

ப—6

வேண்டாம். பிறகு மூன்று ரக்அத்துகள் வித்ரு தொழுவார்கள். 'அல்லாஹ்வின் தூதரவர்களே! வித்ரு தொழுமுன் தாங்கள் உறங்குகிறீர்களே?' என நான் கேட்டேன். ''ஆயிஷா! என்னுடைய கண்களே உறங்குவன. என் இதயம் உறங்காது'' என பெருமானார் [ஸல்] அவர்கள் கூறினார்கள்— என ஆயிஷா நாயகியார் [ரலி] அவர்கள் கூறக் கேட்டு அபூ ஸலமா இப்னு அப்துர் ரஹ்மான் [ரலி] அவர்கள் அறிவிக்கிறார்கள்.

திருக்குர்ஆனின் ஆரம்ப அத்தியாயங்களான பக்கரா, ஆலுஇம்ரான்,னிஸா -- போன்ற நீண்ட அத்தியாயங்களை கூட பெருமானார்(ஸல்)அவர்கள் தங்களின் பின்னிரவு காலத் தொழுகைகளில் ஓதுவார்கள். சிரம் பணியும் அவர்களின் 'ருக்கூவு'களும் மண்டியிடும் 'ஸஜ்தா'களும் நீளமானவையாக இருந்ததுண்டு. அவர்களின் பாதங்களெல்லாம் சுரத்துவிடும். பாவங்களை விட்டும் பாதுகாக்கப் பெற்ற பரிசுத்தத் திருமேனிக்குடையவர்களாயிருந்தும் பரமனின் திருவருளை எண்ணி நன்றி கூர்ந்தவர்களாக பெருமானார் (ஸல்) அவர்கள் சாதாரண நாட்களிலேயே இவ்வாறிருப்பார்களெனில் ரமழ்லான் மாதங்களில் அவர்களின் நிலை எவ்வாறாயிருக்கும். ''ரமழ்லான் மாதம் வந்திடுமானால் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் நிறமே மாறிவிடும்: தொழுகை பெருகி விடும்; அச்சமும் பணிவும் அவர்கள் மீது ஆதிக்கங் கொண்டு விடும் — என அன்னை ஆயிஷா நாயகியார் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். 'ரமழ்லான் முடியும் வரை அவர்கள் படுக்கையை நெருங்கவே மாட்டார்கள்' என்றும் அன்னையாரவர்கள் அறிவிக்கிறார்கள்.

அத்தகைய சிரமங்களுக்கெல்லாம் மறந்தும் பலியாக்கி விடாமல் நாசூக்காக உடலைப் பாதுகாக்கும் நமக்கு ரமழ்லான் மாத இரவுகள் வலியவே கிடைக்கும் எளிய வாய்ப்புகளாகும். அதன் அருமை புரியாது நாம் அதனைத் தவற விட்டிடலாகாது.

ஸஹரின் உணவைத் தவறவிடாமல் கவனமாக விழித் தெழும் அச்சந்தர்ப்பத்தில் குறைந்தது இரண்டு ரக்அத்துக ளாவது அல்லது அதிகமாக எட்டு ரக்அத்துகள் தொழுது நன்மையடையலாம். வித்ரை தராவீஹின் 'ஜமாஅத்'தோ டேயே தொழுதுவிடுவதால் இப்போது தொழ வேண்டிய தில்லை. ஆனாலும் வாழ்க்கையில் தவறிப்போன வித்ரு தொழுகைகளை நினைவில் கொண்டுகழ்லாவாகத் தொழுது கணக்கைச் சமனாக்க முனைவதில் குற்றமில்லை.

لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ أَلْفِ شَهْرٍ

கண்ணியமிக்க இரவென புண்ணிய வேதம் புகழ்ந்திடும்- லைல(த்)துல் கத்ர்—இரவு ஆயிரம் மாதங்களையும் விட மேலானது என்கிறது வேதமாமறை (97 : 03).

إِنَّا أَنزَلْنَاهُ فِي لَيْلَةِ الْقَدْرِ

''நிச்சயமாக இ(ந்)த(க் குர்ஆ)னை கண்ணிய மிக்க) லைல(த்)துல் கத்ர் (எனப்படும் ஓர்) இரவில் இறக்கி வைத்தோம்.'' என்ற வல்லவனின் சொல்லை விண்டுரைக்கின்றது வானமாறை (97 : 01).

திருக்குர்ஆன் பூமிக்கு முதன் முதலாக இறக்கப்பட்ட இரவு—அண்ணல் எம்பெருமானார் அஹ்மத் முஜ்தபா முஹம்மத் முஸ்த்தஃபா ரஸூல் அல்-கரீம் (ஸல்) அவர் களின் இதய கமலத்தில் ஐந்து வசனங்கள் முதன் முதலா கச் சமர்ப்பிக்கப்பட்ட இரவு -ஆயிரம் மாதங்களையும் விட மேலானது என்பது அல்லாஹ்வின் பிரகடனம்.

ஆயிரம் மாதங்களென்ன, ஆயிரம் ஆண்டுகள் உலகில் வாழ்ந்த சமூகங்களும் உண்டு. குறைந்த ஆயுளையே அருளப் பெற்றுள்ள தங்களின் சமூகத்தார் எத்தனை காலம் வழி பட்டு வணங்கினாலும் நீண்ட ஆயுள்களை அருளப் பெற்

றிருந்த முந்திய சமூகத்தாரின் தகுதியை எங்கிருந்து அடைய முடியும் என்ற கவலையால் தூதர் பெருமான் (ஸல்) அவர்கள் சூழப் பெற்ற சமயம் அல்லாஹ் இந்தப் பாக்கிய மிக்க செய்தியை அவர்களுக்கு அறிவித்தான்.

''ரமழ்லான் மாதம்பிறந்த முதல் இரவிலேயே அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் கண்ணியமிக்க—லைல(த்) துல் கத்ர்- இரவை அடைந்து விட ஆவல் கொண்டு பள்ளி யில்—இஉதிகாஃப் எனப்படும் - மவுனத்தவம் மேற்கொண்டு விட்டார்கள். நாங்களும் சிலர் அவர்களைத் தொடர்ந்து மேற்கொண்டோம். அண்ணலார் (ஸல்) அவர்கள் முதற் பத்து நாட்களும் மவுனத்தவம் மேற்கொண்டார்கள். அடுத்த பத்து நாட்களும் திரைகட்டி தனித்திருந்தார்கள். பின்னர் தங்கள் தலையை வெளியே நீட்டி ''கண்ணிய மிக்க—லைல(த்)துல் கத்ர்—இரவைத் தேடி நான் முதற் பத்து நாட்கள் இஉதிகாஃப் இருந்தேன். தொடர்ந்து மத்திய பத்து நாட்களும் இருந்தேன். பின்னர் என்னிடம் வருபவர் (ஜிப்ரஈல்) வந்தார். அவர் அதனை இறுதிப் பத்தில் தேடும்படியாகக் கூறிச் சென்றார். எனவே இஉதிகாஃபில் என்னைத் தொடர்ந்து வந்தவர் இறுதிப் பத்து நாட்களும் இஉதிகாஃப் இருப்பாராக' என அருளினார்கள்—என்று ஹழ்லரத் அபூ ஸஈத் அல் குத்ரீ [ரலி] அறிவிக்கின்றார்கள்.

'கண்ணியமிக்க அந்த இரவை முதலில் எனக்கு அறிவிக் கப்பட்டது. ஆயினும் பின்னர் அது மறக்கடிக்கப்பட்டு விட்டது' என்றும் நபி பெருமான் [ஸல்] அவர்கள் அறிவித் துள்ளார்கள்.

மகத்தான அந்த இரவைப் புரிந்துகொண்டு மக்கள் ரமழ்லானின் மற்ற நாட்களை அலட்சியப் படுத்தி அவற்றி லிடையும் கிடைக்கக்கூடிய பாக்கியங்களை இழந்துவிடக் கூடாதென்பதற்காகவே அது மறைக்கப்பட்டதாக அறிஞர் கள் எழுதுகிறார்கள்,

نَحْوُ لَيْلَةِ الْقَدْرِ فِي الْوِتْرِ مِنَ الْعَشْرِ الْأَوَاخِرِ مِنْ رَمَضَانَ

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அதனை இறுதிப் பத்து இரவுகளில் ஒற்றைப் படையானவற்றில் தேடும்படியாகக் கூறியுள்ளதை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நபிமணித் தோழர்களில் நாயகமான பலரும் தங்களின் முயற்சிகளில், அது இருபத்து ஏழாம் இரவே என்ற முடிவில் ஒன்றுபட்டார்கள்.

'ஸய்யிதுல் முஃபஸ்ஸிரீன் — விரிவுரையாளர்களின் தலைவர்' என்ற சிறப்பை ஸஹாபாக்களிடையே பெற்றிருந்த ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்,

''இறைவன் எண்ணிக்கைகள் அனைத்திலும் ஏழுக்கே சிறப்பிடம் அளித்துள்ளதாக அண்ணலார் (ஸல்) அவர்கள் கூற, நான் கேட்டுள்ளேன். இறைவனும் தன் திருமறையில் ஏழு வானங்கள், ஏழு பூமிகள் என குறிப்பிட்டுள்ளான். இன்னும் மேகத்திலிருந்து மழையைப் பொழிவித்து மனிதர்களுக்கு உணவாக தான் விளையச் செய்யும் பொருட்களில்,

نَبَاتَ كُلِّ شَيْءٍ فَأَخْرَجْنَا مِنْهُ خَضِرًا نُّخْرِجُ مِنْهُ حَبًّا مُّتَرَاكِبًا ۚ
وَمِنَ النَّخْلِ مِن طَلْعِهَا قِنْوَانٌ دَانِيَةٌ وَجَنَّاتٍ مِّنْ أَعْنَابٍ
وَالزَّيْتُونَ وَالرُّمَّانَ مُشْتَبِهًا وَغَيْرَ مُتَشَابِهٍ ۗ

புற்பூண்டுகள், பசுமையான தழைகள், அடர்ந்த வித்துக்களையுடைய கதிர்கள், பேரீச்ச மரத்தின் பாளைகளில் வளைந்து தொங்கும் பழக்குலைகள், திராட்சைத் தோட்டங்கள், மாதுளை, ஜைத்தூன் கனிகள் என ஏழு பொருட்

களையும் வரிசைப்படுத்திக் காட்டுகிறுன் [6 : 99]. எனவே சங்கை மிக்க 'லை[த்]துல் கத்ர்' ஆக அவன் பிந்திய பத்து இரவுகளில் ஏழாவதையே அமைத்திருக்க வேண்டுமென நான் நினைக்கிறேன்'' என விளக்கியுள்ளார்கள்.

அந்த இரவு புழுக்கமோ குளிரால் நடுக்கமோ இல்லாத சம நிலையுடையதாக இருக்கும். அந்த இரவில் நாய்கள் அதிகம் குரைக்கா, கழுதைகள் குரலெழுப்பா, கடல் நீர் கரிக்காது என ஆன்றோர் பலர் தங்களின் அனுபவங்களை அறிவித்துச் சென்றுள்ளனர். 'அந்த இரவு முடிந்து பொழுது புலர்கையில் ஆதவனின் கதிர்களில் தீட்சண்யமிருக்காது' என அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் அறிவித்துள்ளார்கள். அல்லாஹ்வின் திருமறை கூறுவதெல்லாம்,

تَنَزَّلُ الْمَلَٰٓئِكَةُ وَالرُّوحُ فِيهَا بِإِذْنِ رَبِّهِمْ
مِنْ كُلِّ أَمْرٍ سَلَٰمٌ هِىَ حَتَّىٰ مَطْلَعِ الْفَجْرِ

''அதில் மலக்குகளும், [ஜிப்ரஈலாகிய பரிசுத்த] ஆவியும் தங்களின் இறைவனின் கட்டளையின் பேரில் [நடைபெற வேண்டிய] சகல காரியங்களுடன் இறங்குகின்றனர் — சாந்தி சமாதானத்துடன் (அவ்விரவு) விடியற்காலை உதயமாகும் வரையில்'' என்பதாம்.
[97 : 4, 5]

நம்பிக்கை கொண்ட ஆண், பெண் நல்லடியார்களுக்காக அவ்விரவில் விண்ணவர்கள் நின்றவர்களாகவும் மண்டியிட்டவர்களாகவும் பிரார்த்திக்காத எந்தப் பகுதியும் பூமியில் இல்லை என்றெழுதப்படுகிறது. ஆயினும் நாய்கள், பன்றிகள் உள்ள அருவருப்பான இடங்கள், உருவச்சிலைகள் உள்ள வீடுகள், இறைவனுக்கு இணைவைத்து வணங்கப்படும் இடங்களில் விண்ணவர்கள் நுழைவதில்லை என்ற நியதியில் மாற்றமில்லை.

எழுபதினாயிரம் வானவர்களுடன் அவர்களின் தலைவர் ஜிப்ரஈல் [அலை] பூமியில் இறங்குகின்றனர். விழித்து வணங்கிக் கொண்டிருப்பவர்கள் மீது ஜிப்ரஈலே சாந்தியைப் பொழிகின்றனர். நின்று வணங்கிக் கொண்டிருப்போர்க்கோ இறைவனின் புறமிருந்தே வாழ்த்துதல் எத்தி வைக்கப் படும். சுவனவாசிகளுக்குக் கூறப்படுவது போன்று அவர்களை நோக்கி,

سَلٰمٌ قَوْلًا مِّنْ رَّبٍّ رَّحِيْمٍ

'நிகரற்ற அன்புடைய இறைவனால், [உமக்கு] சாந்தியும் சமாதானமும் உண்டாகட்டும் என வாழ்த் தப்படும்' என்றும் எழுதப்படுகிறது.

இந்த நிலை விடியும் வரை நீடிக்கிறது. அந்த இரவில் இறைவனின் அருளை விட்டும் எந்த நல்லடியாரும் தப்புவ தில்லை. விண்ணவர்களும் ஹழ்ரத் ஜிப்ரஈலும் ஒவ்வோர் ஆண், பெண் நல்லடியார்களையும் வாழ்த்துகின்றனர். ''வணக்கத்தில் இணைந்திருப்பவர்களே! உங்கள் மீது ஸலாம். அல்லாஹ் உங்கள் வணக்கங்களை அங்கீகரித்து உங்களுக்கு நன்மைகளே விளையச் செய்வானாக. வழி பிசகி விட்டவர்களே! உங்கள் மீதும் ஸலாம். அல்லாஹ் உங்கள் பிழைகளைப் பொறுத்தருள்வானாக. உறக்கத்தில் ஆழ்ந்திருப்பவர்களே! உங்கள் மீதும் ஸலாம். அல்லாஹ் உங்களைப் பொருந்திக் கொள்வானாக. மண்ணறைகளுக்குச் சென்று விட்டவர்களே! உங்கள் மீதும் ஸலாம். அல்லாஹ் உங்களுக்கு நிம்மதியைத் தந்தருள்வானாக'' என்றவாறாக விண்ணவர்கள் தங்கள் வாழ்த்துதல்களால் அத்தனை அடி யார்களையும் அடைய வளைந்துக் கொள்கின்றனர். இதுவே,

مِّنْ كُلِّ أَمْرٍ سَلٰمٌ

'சகல காரியங்களைக் கொண்டும் சாந்தியே' என்ற சொற்றொடரின் விளக்கம் என ஞானவான்கள் எழுதுகின்றனர். ஆனால்,

அந்தக்காரர்களுக்கு இந்தப் பேற்றில் அணுவத்துணையும் பங்கில்லை. தடுக்கப்பட்ட வழியில் பொருளீட்டி வாழ்பவர்கள், உறவுத் தொடர்புகளை அறுத்தெறிபவர்கள், புறம் பேசுபவர்கள், அநாதைகளின் உடைமைகளை உண்பவர்கள் முதலானோர்க்கு மலக்குகளின் வாழ்த்துதல்களில் தொடர்பே இல்லை என உலமாக்கள் எச்சரிக்கின்றார்கள்.

முந்தின சமுதாயத்தினர்களில் ஆயிரம் மாதங்கள் வரை, கண்ணிமைக்கும் நேரமும் இறைவனின் எண்ணத்தை மறவாமல் வழிபாட்டில் ஈடுபட்டிருந்த ஹழ்ரத் அய்யூப், ஜ்கரிய்யா, ஹிஸ்கீல், யூஷஉ இப்னு னூன் [அலை] ஆகிய நால்வரைப் பற்றி அண்ணல் எம்பெருமானார் [ஸல்] அவர்கள் விவரிக்கக் கேட்டு ஸஹாபாக்கள், அவ்வாறே தாங்களும் வணங்கத் தோதாக தங்களுக்கு நீண்ட ஆயுட்கள் அருளப்படவில்லையே என கவலையுற்றார்கள். அச்சமயம் அங்கு வந்த ஹழ்ரத் ஜிப்ராஈல் [அலை] அவர்கள் மகத்துவமிக்க—லைல[த்]துல் கத்ர்—இரவின் மாண்புகளை எடுத்தோதக் கேட்டு அனைவரும் பூரிப்படைந்தார்கள்.

إِذَا دَخَلَ الْعَشْرُ شَدَّ مِئْزَرَهُ وَأَحْيَى لَيْلَهُ وَأَيْقَظَ أَهْلَهُ

''ரமழ்லான் மாதத்தில் இறுதிப் பத்து நாட்கள் வந்திடுமானால் பெருமானார் [ஸல்] அவர்கள் வணக்க வழிபாடுகளில் வரிந்து நிற்பார்கள்; விழிப்பிலேயே இரவுகளை உயிர்ப்பிப்பார்கள். தங்கள் வீட்டார்களையும் விழித்திருக்கச் செய்வார்கள்'' என்ற செய்தியை ஆயிஷா நாயகியார் அறிவிக்கின்றார்கள்.

அறிவுத் தெளிவுடைய நம் ஆன்றோர்களும் அருள் மய மான அவ்விரவுகளை வணக்க வழிபாடுகளைக் கொண்டு பயனுடையவையாக்கிக் கொண்டிருந்தார்கள். அவ்விரவு களில் இரண்டிரண்டு ரக்அத்துக்களாக ஆயிரம் ரக்அத்துகள் தொழுத சிலர்களும் உண்டு. அதே சமயம் தராவீஹ் தொழுகையை முடித்து மேலதிகமாக இரண்டே ரக்அத்து களேனும் தொழுவதை நியதியாக்கிக் கொண்டிருந்தவர் களுமுண்டு.

பிந்திய பத்து நாட்களிலும் ஒவ்வோர் இரவிலும், அது லைலத்(த்)துல் கத்ராகவே இருக்க வேண்டும் என்ற அனு மானத்தோடு இரண்டிரண்டு ரக்அத்துகள் தொழுது வந்த பெரியோர்களுமுண்டு. அவ்வாறான அனுமானங் கொண்டு ஒவ்வோர் இரவிலும் பத்து ஆயத்துகளையேனும் ஓதித் தொழுதவர் லைலத்[த்]துல் கத்ருடைய பரக்கத்தை விட்டும் ஏமாற்றமடைந்து விட மாட்டார் என்றும் ஒரு பெரியார் கூறியுள்ளார்.

مَنْ حُرِمَهَا فَقَدْ حُرِمَ الْخَيْرَ كُلَّهُ وَلَا يُحْرَمُ خَيْرَهَا إِلَّا مَحْرُوْمٌ

அந்த இரவை விட்டும் பேறிழந்தவன் எல்லா நன்மைகளை விட்டும் பேறிழந்தவனேயாவான். மெய்யான தரித்திரனைத் தவிர மற்றெவனும் அதன் நன்மைகளை விட்டும் பேறிழப் பதில்லை—என பெருமானார் [ஸல்] அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் [ரலி] அவர்கள் அறிவித் துள்ளார்கள்.

மகத்துவம் பொருந்திய லைலத்[த்]துல் கத்ர்—இரவில் நிறை வணக்கம் புரியச் சடைவுற்றவர் பெறக் கிடைத்த பேற்றினைத் தவற விட்டவரேயாவார். மற்ற இரவுகளில் தராவீஹ்—தஹஜ்ஜத் தொழுகைகளைத் தவற விடாது பேணுவோரும் அவ்விரவில் அவற்றுக்கிடைப்பட்ட நேரத்தை

யும் வணக்க வழிபாடுகளால் ஜீவனடையச் செய்வார்களாயின் பெரும் பேறடைவர் என்பதில் ஐயமில்லை.

திருக்குர்ஆனை முழுமையாகவே ஓதித் தொழும் பாக்கியம் பெற்றவர்கள் கூட்டுத் தொழுகை நடத்தி இறையன்பைத் தேடுகின்றனர். மற்றவர்கள் ஒவ்வொரு ரக்அத்திலும் ஸூரத்துல் ஃபாத்திஹாவையடுத்து 'இன்னா அன்ஸல்னா' என துவங்கும் 'ஸூரத்துல் கத்ரை' ஒரு முறையும், "குல்ஹுவல்லாஹு அஹத்' என துவங்கும் 'ஸூரத்துல் இக்லாஸை' மும்முறையும் ஓதி இரண்டிரண்டு ரக்அத்துகளாக இயன்றவரை தொழலாம்.

வாழ்க்கையில் விடுபட்டுப் போன 'கழ்லா' தொழுகைகளையும் நிறைவேற்றலாம்.

தஸ்பீஹ் தொழுகையைத் தொழலாம்.

திருக்குர்ஆன் ஓதுவதும் இவ்விரவை ஒளிபெறச் செய்யும் ஒரு வணக்கமாகும்.

விசுவாசிகளின் நெஞ்சங்கள் ஆன்மீக வெளிச்சம் பெறும் மாதமிது. வேத மாமறையாம் குர்ஆனை ஓதுவது கொண்டே இம்மாதம் அலங்காரம் பெறும் - என ஞானிகளுக்கரசர் முஹியத்தீன் ஆண்டகை அவர்கள் கூறுகிறார்கள்.

திருக்குர்ஆன் இறக்கப்படத் தெரிந்தெடுக்கப்பட்ட காரணத்தாலேயே சிறப்பேற்றிலங்கும் இம்மாதம் முழுவதுமே திருக்குர்ஆன் ஓதப்படத் தேவையான மாதமேயாகும். ஒவ்வொரு ரமழ்லானிலும் நபி பெருமான் (ஸல்) அவர்களிடமும் கூட அது வரை இறக்கப்பட்ட வசனங்களனைத்தையும் முறையாக ஓதச் செய்து ஹழ்ரத் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் கேட்டார்கள்; பெருமானார் (ஸல்) அவர்களின் உலக வாழ்வின் இறுதி ரமழ்லானில் அவ்வாறாக இருமுறை ஓதச் செய்து கேட்டார்கள்.

வாழ்நாளின் எல்லாப் பகல்களிலும் இரவுகளிலும் திருக்குர்ஆன் ஓதும் வாலாயம் மிக்கவர்களும் இம்மாதத்தில் அதனை மிகைப்படுத்தல் நலம் பயக்கும்.

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلًا

''திருக்குர்ஆனை நன்கு திருத்தமுடன் ஓதுங்கள்'' என பணிக்கிறது இறைவனின் திருமறை (73 : 04); திருத்தமுடன் ஓதுவதோடு மட்டுமின்றி வாழ்க்கைக்கு வழிகாட்ட வந்துள்ள அவ்வேத மாமறையை உய்த்துணர இப்புனித மாதம் பயனுடையதாய் நமக்கு அமைய வேண்டும்.

''எனக்குப் பின் நான் உங்களிடையே இரண்டு உபதேசிகளை விட்டுச் செல்கிறேன். அவற்றுள் ஒன்று பேசக்கூடியது. மற்றொன்று மவுனித்திருப்பது. பேசக் கூடியது திருக்குர்ஆன். தன் மவுனத்தின் மூலமே உங்களுக்கு உபதேசிப்பது மரணம் — என பெருமானார் [ஸல்] அவர்கள் கூறிப் போந்தார்கள். பேசக்கூடிய அந்த உபதேசி அலங்காரமாக அமர்ந்துள்ளது நம் வீட்டின் மாடத்தில். அன்றாடம் அதனை எடுத்து அடக்கத்தோடு ஓதி பரக்கத்தை — பாக்கியத்தைத் தேடத் தவறுவதில்லை நாம். ஆனால் அந்த உபதேசியிடத்தில் இதுவரை நாம் கேட்டுள்ள உபதேசங்கள் என்னென்ன?

என்றாவது அது பேசியதுண்டா நம்மோடு?

கேட்க நாம் செவிகளை விரித்தாலல்லவா அது பேசும் நம்மோடு?

அரபு மொழியில் அருளப்பெற்ற அவ்வேதத்தை அழகுற ஓதக் கற்பிப்பதோடு சரி, அதற்குப் பொருள் விரித்து மக்களுக்கு விளங்கச் செய்யத் தேவையான — தகுதி படைத்த — உலமாக்களுக்கும் பற்றாக்குறையாகவிருந்த

தலைமுறையைக் கடந்து விட்ட நமக்கு திருக்குர்ஆனின் மிக எளிய மொழி பெயர்ப்புகளும், தெளிவான விரிவுரை களும் தாராளமாகக் கிடைக்கின்றன இப்போது. திருக்குர் ஆன் மொழி பெயர்க்கப்படாத மொழியே இல்லாத ஒரு சகாப்தம் மலரும் நிலையில் திருக்குர்ஆன் என்ன கூறுகிறது என்பது நமக்குத் தெரியாமலிருப்பதே என்ன பேதமை! அதனைத் தெரிந்து கொள்ள நேரமற்றுப் போவதே எத் துணைப் பெரும் துர்ப்பேறு!

முத்தி, முகர்ந்து பத்திரமாகப் பாதுகாக்கப்பட வேண் டிய கலைப்பொருளா திருக்குர்ஆன்? ஓதியுணர்ந்து வாழ்க் கையின் வழிகளனைத்திலும் பேணிப் பின்பற்ற அருளப் பட்ட ஒளிப்பேழையல்லவா அது.

''என் அடியானே! உன் உடன் பிறந்தானின் கடிதம் உன் கரத்தில் கிடைக்கும் போது நீ வீதியில் நடந்து கொண்டிருந்தாலும் உடனே ஓரங்கட்டி நிற்கிறாய். ஒதுங் கித் திரும்பி அக்கடிதத்தைப் பிரித்து ஒவ்வொரு சொல்லா கப் படிக்கிறாய். அதன் மீது கவனம் செலுத்துகிறாய். அதே சமயம் இந்தத் திருவேதம் என்னுடைய ஒரு கடிதம்; படித்து நீ கவனம் செலுத்த வேண்டும்; வழிபற்ற வேண்டு மென்பதற்காக நான் உனக்கு எழுதியது. அதனை நீ புறக் கணிப்பது பற்றி, படித்த பின்னரும் அதன் பேரில் கவனம் செலுத்தாமலும் வழி பேணாமலும் இருப்பது பற்றி நீ வெட்கமுறவில்லையா? — என தவ்ராத்தில் எழுதப்பட்டி ருப்பதாக அறிவுலக மேதை இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர் கள் ஞானத்துக்கு உயிரூட்டட தாங்கள் எழுதிய நூலில் குறிப் பிட்டுளளார்கள்.

''என் சமுதாயத்தில் திருக்குர்ஆன் ஓதும் பெரும்பா லான பேர் நயவஞ்சகர்களாகவே இருப்பார்கள் — என பெருமானார் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

''குர்ஆனை ஓதும் அநேகருக்கு அது அவர்களின் தொண்டைக் குழியோடு நின்றுவிடும்; அதற்குக் கீழே (நெஞ்சில்) இறங்காது — என்றும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் சொல்லிக் காட்டினார்கள்.

இன்று நம்முடைய நிலைதான் என்ன? திருக்குர்ஆனை நெஞ்சிலேயே சுமந்தும்தான் அலைகின்றோம். ஆனால் திருக்குர்ஆனைப் புரிந்து கொள்ள முனைந்தோமா?

''திருக்குர்ஆனைப் பாராயணம் செய்வது அதனை நினைவில் நிலைபெறச் செய்வதற்காக; நினைவில் நிலை பெறச் செய்வது செயல்படுத்துவதற்காகவே — என இமாம் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

''உங்களுக்கு முந்தியவர்கள் திருக்குர்ஆனை அல்லாஹ் விடமிருந்து வந்துள்ள செய்தியாக உணர்ந்தவர்களாயிருந் தார்கள்; இரவு காலங்களில் அதனை ஆழ்ந்து ஆய்பவர்க ளாகவும் பகற்காலங்களில் அதன்படி செயல்படுபவர்களாக வும் இருந்தார்கள். நீங்களோ அதனை ஓதக் கற்றுக் கொண்டதோடு சரி; அதன்படி செயல்படுவதில் சோம்ப லடைந்து விடுகிறீர்கள். ஆனால் திருக்குர்ஆன் ஓத மட்டுமே அருளப்பட்ட வேதமல்ல, செயல்பட இறக்கப்பட்ட இறை வனின் செய்தி — என இமாம் ஹஸன் பஸரீ [ரஹ்] அவர் கள் உபதேசித்தார்கள்.

كِتٰبٌ اَنْزَلْنٰهُ اِلَيْكَ مُبٰرَكٌ لِّيَدَّبَّرُوْۤا اٰيٰتِهٖ وَلِيَتَذَكَّرَ اُولُوا الْاَلْبَابِ ○

''நபியே! அவர்கள் இந்த வசனங்களைக் கவனித்து ஆராய்வதற்காகவும் (அதைக் கொண்டு) அறிவுடை யோர் நல்லுணர்ச்சி பெறுவதற்காகவும் மிக்கப் பாக்கி யம் பெற்ற இவ்வேதத்தை நாமே உம்மீது அருள்புரிந் தோம் — என திருக்குர்ஆன் தான் அருளப்பட்ட காரணத்தை விளக்குகிறது (38 : 29). திருக்குர்ஆனை ஓது

வதையும் ஓதக் கேட்பதையும் ஒரு சடங்காகவே முடித்து நம்முடைய காலம் கழிந்து விடுமானால் அது இறக்கப்பட்ட காரணம் பூரணத்துவம் பெறுவது எப்போது?

إِنَّ فِي ذَٰلِكَ لَذِكْرَىٰ لِمَن كَانَ لَهُ قَلْبٌ أَوْ أَلْقَى السَّمْعَ وَهُوَ شَهِيدٌ ○

''எவருக்கு(ப் பரிசுத்தமான) இருதயமிருந்து, ஓர் மைப்பாடான மனதுடன் செவி சாய்க்கின்றாரோ அவருக்கு நிச்சயமாக இதில் [நல்ல] படிப்பினை இருக்கிறது —என அந்த ஞானக்கருவூலம் (50 : 37) தன் பொக்கிஷத்தை வழங்கக் காத்திருக்கிறது. செவி மாந்திச் செழிக்கச் சடைவேன் நமக்கு!

إِنَّا أَنزَلْنَا إِلَيْكَ الْكِتَابَ بِالْحَقِّ لِتَحْكُمَ بَيْنَ النَّاسِ بِمَا أَرَاكَ اللَّهُ

''(நபியே!) முற்றிலும் உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை நாமே உம்மீது அருளியிருக்கிறோம். ஆகவே அல்லாஹ் உமக்கு அறிவித்தவற்றைக் கொண்டு மனிதர்களிடையே நீர் தீர்ப்பளிப்பீராக — என்ற வேத மாமறையின் (4 : 105) எச்சரிக்கை நபியின் சமுதாயத்தார் எல்லோருக்கும்தான்.

விட்டு வாழ்க்கையிலும் சமூகக் கூட்டுவாழ்க்கையிலும் நாட்டின் நடவடிக்கைகளனைத்திலும் சுழலும் உலகின் ஒவ்வோர் அசைவிலும் கவனம் செலுத்தியாக வேண்டிய நிர்ப்பந்தம் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் ஏற்பட்டுவிட்ட இன்றைய கால கட்டத்தில் இறைவனின் திருவேதத்தின் ஏவலை, விலக்கலை, நீதத்தை, போதத்தைப் புரிந்து கொள்ள வேண்டிய கட்டாயம் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இல்லையா? கரிசனம் இருக்க வேண்டாமா?

''மறுமைப் பெருவெளியில் இறைவனின் திருமுன் பரிந்துரைக்க விண்ணவர்கள் நபிமார்கள் அனைவரினும் முன்னு

ரிமை பெற்றது மாமறை குர்ஆன் -- என பெருமானார் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள். இம்மையில் தன் பேச்சைக் கேட்டவர்களுக்கே யல்லவா அது மறுமையில் பரிந்துரைக் கும். எனவே திருக்குர்ஆனைப் பேசச் செய்து அதன் வழி பற்றி வாழ ரமழ்லான் மாதம் நமக்கு வழி திறக்கட்டும்.

திருக்குர்ஆனைச் சுமந்த திரு நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துகளையும் ஓதல் அவசியமாம். அண்ணலார் (ஸல்) அவர்களின் சமுகத்துக்கு ஸலாமையும் சமர்ப்பித்திட மறந் திடலாகாது. 'ஸாஹிபுல் குர்ஆன்' என்ற சங்கை மிகுந்த அந் நாயகத்தின் பரக்கத்தாலேயேயன்றோ இவ்விரவு நமக் குக் கிடைத்தது; இம்மாதம் நமக்குக் கிடைத்தது; இம் மார்க்கம் நமக்குக் கிடைத்தது; இவ்வுலகம் நமக்குக் கிடைத்தது. நம்பிக்கையாளர்களின் நெஞ்சங்கள் நன்றியை மறந்திடல் எங்ஙனம் தகுதியாகும்?

மாமறை வசனங்கள் முதலாவதாக இறக்கப்பட்ட இரவு மாதங்கள் ஆயிரத்திலும் மகத்துவமுடையது என்ற இறையருள் வாக்கு, மாமறை வசனங்களை முழுமையாகவே சுமந்த நாயக மாமணியின் நெஞ்சம் எத்தகைய மாண்புடை யது என்பதை விளக்கப் போதுமானதன்றோ!

لَوْ أَنزَلْنَا هَٰذَا الْقُرْآنَ عَلَىٰ جَبَلٍ لَّرَأَيْتَهُ خَاشِعًا
مُّتَصَدِّعًا مِّنْ خَشْيَةِ اللَّهِ

"யாதொரு மலையின் மீதும் நாம் இந்தக் குர் ஆனை இறக்கி வைத்தால் அது அல்லாஹ்வின் அச்சத் தால் நடுங்கி வெடித்துப் பிளந்து போவதை நிச்சயம் நீர் கண்டிருப்பீர்" என்பது அல்லாஹ்வின் சொல்.
(59 : 21)

—மனிதர்கள் உற்றுணர்ந்து பார்க்கும் பொருட்டு அல் லாஹ் கூறும் உதாரணம்!

மலைகளும் சுமக்க இயலாத மாமறையைச் சுமந்த மகத்துவ நெஞ்சத்துக்குடையவர்கள் அண்ணல் எம்பெருமானார்!

வேதம் இறக்கப்பட்ட மாதத்தின் மகத்துவத்தோடு வேத மாமறையைச் சுமந்த நாதநபியின் மாண்பையும் ஜிப்ரஈல் (அலை) உணர்த்திச் சென்ற ஒரு சம்பவத்தை 'ஹதீஸ்' நூல்கள் காட்டுகின்றன.

ஒரு ரமழ்லான் மாதத்தில் 'மஸ்ஜிதுன் னபவீ'யின் மேடையில் உரையாற்ற ஏறிய அண்ணலார் (ஸல்) அவர்கள் முதற் படியில் நின்று 'ஆமீன்' என்றார்கள்; பின்னர் இரண்டாம் படியில் ஏறி நின்று 'ஆமீன்' என்றார்கள்; அடுத்து மூன்றும் படியிலும் ஏறி நின்று 'ஆமீன்' என்றார்கள். பேருரை முடிந்து, தொழுகையும் முடிந்த பின்னர் தோழர்கள் விளக்கம் கேட்டபோது பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''முதற் படியில் ஏறியபோது என் முன் தோன்றிய ஜிப்ரஈல், 'ரமழ்லான் மாதத்தை அடையப் பெற்று, அது கடந்த பின்னரும் எவனுடைய பிழைகள் பொறுக்கப்படவில்லையோ அவன் நாசமடையட்டும்' என சபித்து என்னை 'ஆமீன்' கூறச் சொன்னார்; நான் கூறினேன்.

''இரண்டாம் படியில் நான் ஏறியபோது, 'ஒரு சபையில் தங்களின் திருப்பெயர் கூறப் பெற்றும் தங்கள் மீது எவனொருவன் ஸலவாத்து கூறவில்லையோ அவன் நாசமடையட்டும்' என சபித்து என்னை 'ஆமீன்' கூறச் சொன்னார் ஜிப்ரஈல்; நான் கூறினேன்.

''மூன்றாம் படியில் நான் ஏறியபோதும் ஜிப்ரஈல், 'தன் பெற்றோர் இருவரையுமோ அல்லது அவர்களுள் ஒருவரையோ முதுமையடைந்தவர்களாகத் தன் வாழ்க்கையில் பெற்றிருந்தும் எவனுடைய பாவங்களுக்கு விமோசனங்

கிடைக்கவில்லையோ அவன் நாசமடையட்டும்' என சபித்து என்னை 'ஆமீன்' கூறச் சொன்னார் ; நான் கூறி னேன்.''

அண்ணலார் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துரைக் காதவரின் அருள் வேட்டுதல்கள் — துஆ — ஆண்டவனின் சன்னிதானத்தை எத்துவதில்லை என்ற எச்சரிக்கையை ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் மீது ஓதப்படும் ஸலவாத் துகள், எக்காரணங் கொண்டும் இறைவனால் அங்கீகரிக்கப் படாமல் ஒரு போதும் புறக்கணிக்கப்படுவதில்லை. ஒருவ ரின் பிரார்த்தனைக்குத் துவக்கமாகவும் முடிவாகவும் ஸலவாத்துகள் ஓதப்படுமானால் அவற்றை அங்கீகரித்து அவற்றிற்கிடைப்பட்ட பிரார்த்தனையைப் புறக்கணிப்பதில் இறைவன் வெட்கமடைபவன் என அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

எனவே, பெருமான் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் தும் ஸலாமும் ஓதி பின்னர் பிழை பொறுக்கத் தேடி 'இஸ் திக்ஃபார்' ஓதுவோமாக.

'யா அல்லாஹ்! நிச்சயமாக நீ மன்னிக்கக் கூடியவன், மன்னிப்புக் கோரலை உவப்பவன், என்னை மன்னித்தருள் வாயாக' என்ற பொருளுடைய,

اللّٰهُمَّ اِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّىْ يَاغَفُوْرُ ○

அல்லாஹும்ம இன்னக(க்)க அஃபுவ்வுன் துஹிப்புல் அஃப்வ ஃபஃபு 'அன்னீ' யா 'கஃபூர்'

என்ற துஆவை அதிகம் ஓதும்படியாக பெருமானார் (ஸல்) அவர்கள் ஏவியுள்ளதை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

'அஸ்மாஉல் ஹுஸ்னா' எனப்படும் அழகிய திருநாமங் களை இவ்விரவில் மட்டுமின்றி ரமழ்லான் மாதத்தின் ஒவ் வோர் இரவிலுமே ஓதி இறையருளை யாசித்து மன்றாட லாம்.

நான்கு காரியங்களை நீங்கள் அதிகமாக (அமல்) செய்யுங்கள். அவற்றில் இரண்டினால் நீங்கள் உங்கள் இறைவனின் பொருத்தத்தைப் பெற்றுக் கொள்வீர்கள். ஒன்று லாஇலாஹ இல்லல்லாஹ்— வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர மற்றெவனுமில்லை—என்ற —திக்ரு—உச்சாடனத்தின் மூலம் அவனுடைய ஏகத்துவத்தை உறுதிப்படுத்துதல், இரண்டாவது 'இஸ்திக்ஃபார்' எனப் படும் பிழை பொறுக்கத் தேடுதல். மற்றும் இரண்டு காரி யங்கள் உங்களின் அவசியத்துக்குரியவையாகும், அவை சுவனத்தை யாசிப்பதும் நரகை விட்டும் பாதுகாப்பு தேடு வதுமாம்—என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பொருள் வளம் படைத்தோர்க்கு மேலும் அருள் வளம் பெருகச் செய்யும் மாதம் இந்த ரமழ்லான் மாதம். அவர் களின் 'ஜ்ஸக்காத்'தை வழங்கிட ஆண்டு முழுவதும் ஏற்பு டையதேயானாலும் ரமழ்லான் மாதத்தின் ஒவ்வொரு நன்மையான செயலும் எழுபது மடங்கான பலனைத் தரு கிறதென்பது கவனமேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். அன்றியும் ஏழை எளியோர்கள்—வாழ்க்கை நலியப் பெற்ற உற்றார் உறவினர்களின் நெஞ்சங்கள் தங்களின் பங்கை எதிர்நோக்கும் பருவகாலமிது; அல்லாஹ்வின் பாதையில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டுள்ள உலமாக்கள், மார்க்க ஊழியர்களுக்கு நம்பிக்கையூட்டும் சுனை இந்த ரமழ்லான் மாதம்.

தங்களின் இக்கடனை நிறைவுபடுத்த ரமழ்லான் மாதம் முழுவதுமே அள்ளி வழங்கி மகிழ்ந்திடும் சீமான்கள்

லைல(த்)துல் கத்ருடைய இரவில் தங்களின் பொருள் வணக்கத்தையும் பெருகிடச் செய்வார்களாக; பசித்தவர் களைப் புசிக்கச் செய்து நலிந்தவர்களின் நெஞ்சங்களை மலரச் செய்து இறையருள் மாரியில் குளித்தெழுவார்களாக!

ரமழ்லான் மாதம் வந்திடுமானால் கலீஃபா உமர் (ரலி) அவர்கள், ''மக்களே! நன்மைகளையும் பாக்கியங்களையும் பொதிந்துள்ள இந்த ரமழ்லானைக் கொண்டு உங்களுக்கு நற்சோபனம். இதன் பகல்கள் நோன்பிருக்கப்பட வேண்டி யவை. இதன் இரவுகள் வழிபாட்டுக்குரியவை. இறைவனின் வழியில் அள்ளிச் செலவழிக்கப்பட வேண்டிய மாதமிது— என அறிவுறுத்துபவர்களாக இருந்தார்கள்.

ஒரு ரமழ்லானின் வணக்க வழிபாடுகள் மறு ரமழ்லானுக் கிடைப்பட்ட பாவங்களனைத்துக்கும் பரிகாரங்களாகி விடு கின்றன என நபிமணித் தோழர்கள் விளம்பக் கேட்டதாக அபூ கைஃஸுமா (ரலி) அறிவிக்கின்றனர்.

மனித உடலுக்கு இதயம் அமைந்திருப்பதே போன்று மாதங்களிடையே ரமழ்லான் அமைந்துள்ளதாக எழுதுகிறார் கள் ஜீலானின் கோமான். தீனுக்கு ஜீவனளித்த சீமான் ஹழ்ரத் அப்துல் காதிர் ஆண்டகையவர்கள் மேலும் எழுதுகிறார்கள்: மற்ற மனிதர்களிடையே நபிமார்களுக் குரிய பெருமையைப் போன்றது—மற்ற நகரங்களிடையே கஅபாவைச் சுமந்துள்ள புனித பூமிக்குரிய தகுதியைப் போன் றது ரமழ்லான் மாதத்தின் பெருமையும் தகுதியும். நபி மார்கள் மற்ற மனிதர்களுக்காக இறைவனிடம் பரிந்துரைப் பார்கள். ரமழ்லானும் தன்னைக் கண்ணியப்படுத்தியவருக் காக இறைவனிடத்தில் பரிந்துரைக்கும். சபிக்கப்பட்ட 'தஜ்ஜால்' புனித எல்லைக்குள் நுழைய முடியாது தடுக்கப்பட் டிருப்பதே போல் ரமழ்லான் மாதத்தில் ஷைத்தான்கள் தரி கெட்டலையாதபடி விலங்கிடப்படுகிறார்கள் — என்று.

ரமழ்லான் மாதத்தில் மன்னிக்கப்படாத அடியான் மன்னிக்கப்பட வேறெந்த மாதமிருக்கிறது — என வினவும் மாதவர்க்கரசரவர்கள் பச்சாதாபத்தின் வாசல்கள் மூடப் படுமுன் அல்லாஹ்வின் திருமுன் அடியான் அழுது மன்றாடி தன் பாவங்களைக் கழுவப் பெற்றுக் கொள்ள வேண்டுமென எச்சரிக்கிறார்கள்.

அடுத்த ரமழ்லானை நம்மில் அனைவருமே அடைந் திடப் போவதில்லை. வணக்க வழிபாட்டுக்கான—பிழை பொறுக்கத் தேடுவதற்கான—மறுவாய்ப்பையே நம்மில் எத் தனையோ பேர் பெறப் போவதில்லை. எனவே கிடைத்துள்ள வாய்ப்பை இழந்துவிடாமலிருக்க நம்மை ஆழ்த்தி, மறதியி லிருந்து விடுபடுவோமாக; மயக்கத்திலிருந்து தெளிந்தெழு வோமாக. வேதமும் வேத நாயகரும் ஏவியபடி, முன்னோர் கள் வகுத்து, பேணிக்காட்டிய வழிமுறைப்படி அருளிறங் கும் பருவகாலத்தின் விளைச்சலைச் சேமிப்போமாக.

வான்மறை அருளப்பட வல்லவனால் தெரிந்தெடுக்கப் பட்ட வளமார் ரமழ்லான் மாதமே உனக்கெங்கள் ஸலாம். தீங்குரலால் திருமறை ஓதப்பெறும் தேன் சுவை மாதமே உனக்கெங்கள் ஸலாம். பாவிகளுக்கு விமோசனந் தரும் மாதமே உனக்கெங்கள் ஸலாம். பச்சாதாபங்கள் ஏற்கப்படும் மாதமே உனக்கெங்கள் ஸலாம். மோனிகளை மகிழச் செய்யும் மாதமே உனக்கெங்கள் ஸலாம். ஞானி களுக்கு வெளிச்சந்தரும் மாதமே உனக்கெங்கள் ஸலாம்.

இறையச்சத்தைக் கொண்டு எங்களைப் பரிசுத்தப்படுத்த வந்த இனிய ரமழ்லானே எங்களின் விழிகளுக்கு நீ ஒளியா னாய். எங்களின் வழிகளுக்கு நீ துணையானாய். உன் வர வால் நாங்கள் பூரித்தோம்; மகிழ்ந்தோம்; உன்னைக் கண்ணியப்படுத்தவே நாங்கள் பகலெல்லாம் பசித்திருந் தோம்; உன் சங்கையைப் பேணி எங்களின் இரவுகளை

விழிப்பில் கழித்தோம்; இறையில்லங்களை ஒளி பெறச் செய்தோம்; மறை வசனங்களை ஒலிக்கச் செய்தோம். பிழைபொறுக்கத் தேடி பிரலாபித்தழுத நெஞ்சங்களுக்கு நிம்மதி கிடைக்க இறைவனின் திருமுன் நீ பரிந்துரைப் பாயாக. தங்களின் பாவங்களை எண்ணி கண்ணீர் மழையில் கழுவாய் தேடியவர்களுக்கு நற்சோபனங் கிடைக்க நீ பரி வுரை செய்வாயாக — என வாழ்த்தி வழுத்தி ரமழ்லான் மாதத்துக்கு விடை கூறுகையில், பிறக்கும் ஷவ்வால் மாதத் தின் முதல் இரவும் மிக முக்கியமான இரவாகும். விண்ணு லகில் இதனை 'லைல(த்)துல் ஜாயிஜ்ஸா — சன்மானங்கள் வழங்கப்படும் இரவு' என வர்ணிக்கப்படுகிறது. மாதம் முழுமையும் அல்லும் பகலுமாக விழித்திருந்தும் பசித்திருந் தும் உழைத்துச் சிறந்த பணியாளர்கள் தங்களின் எஜமா னன் பரிசுகளை ஏந்தி வருகையில் உறக்கத்தில் ஆழ்ந்துவிடு வதுதான் என்ன பேதமை! ஆனால் பாமரர்களென்ன பண்டிதர்களான பலரும் கூட கடமையை முடித்த திருப் தியோடு களைப்பின் மிகுதியால் படுக்கையை அணைத்து இனிய கனவுகளில் ஆழ்ந்து விடுவதும் பெரும் பரிதாபம். ஆனால் தன் அடியார்கள்பால் கருணை நிறைந்த இறைவன் மறுநாள்—பெருநாளின் காலை தன் விண்ணவர்களை (உல கின்) எல்லாப் பாகங்களிலும் இறங்கச்செய்கிறான். மண்ணில் இறங்கும் அவ்விண்ணவர்கள் வீதிகள், பாதைகள் அனைத் திலும் நின்று "பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களின் சமூகத்தாரே! கண்ணியம் மிகுந்த இரட்சகனின் திருவாசலை நோக்கி விரையுங்கள். அவன் தன் மேலான சன்மானங்களை வழங்கிடவும் உங்களின் பாவங்கள் அனைத்தையும் மன்னித் திடவும் காத்திருக்கிறான்'' என அறைகூவும் குரலை ஜின் களையும் மனிதர்களையும் தவிர்த்த மற்ற படைப்பினங்க ளனைத்தும் செவியுறுகின்றன. மக்கள் தங்களின் தொழுகை வணக்கத்தை நோக்கிப் புறப்படுகையில் அல்லாஹ் "என் விண்ணவர்களே! தன் பணியை நிரப்பமாக்கிய ஊழியனுக் குரிய ஊதியம் எவ்விதம் செலுத்தப்பட வேண்டும்'' என

வினவுகிறான். "எங்கள் இரட்சகா! எங்களின் தலைவா!! அதற்குரிய ஊதியம் முழுமையாகவே தரப்பட வேண்டும்" என விண்ணவர்கள் கூறுகின்றனர். உடனே இறைவன், "விண்ணவர்களே! ரமழ்லான் மாதத்தில் நோன்பிருந்து வணக்கத்தில் தங்களின் இரவுகளைக் கழித்த என் அடியார்களை நான் பொருந்திக் கொண்டதற்கும் மன்னித்து விட்டதற்கும் உங்களை சாட்சியாக்குகிறேன்." என கூறுகின்றான். அதன் பின் அல்லாஹ் தன் அடியார்களை நோக்கி, "என் அடியார்களே! என்னிடம் நீங்கள் கேட்க நாடுவதைக் கேளுங்கள். என் மாண்பின் மீதும் மகத்துவத்தின் மீதும் சத்தியமாக! உங்கள் மறுமைப் பெருவாழ்வுக்காக இன்று நீங்கள் கேட்பதை அருள் புரிவேன். உங்கள் இம்மை வாழ்வுக்காக நீங்கள் கேட்பவற்றின் மீதும் நான் கவனம் செலுத்துவேன். என் மாண்பின் மீதாணையாக! என்னைப் பேணி நடக்கும் உங்களின் குறைகளைத் திரையிட்டு மறைத்து விடுவேன். என் மாண்பின் மீதும் மகத்துவத்தின் மீதும் சத்தியமாக! மற்ற குற்றவாளிக்கு முன்னே உங்களை மானபங்கப்பட விடமாட்டேன்; உங்களின் நம்பிக்கைகள் மோசம் போக விடமாட்டேன். பூரணமாக மன்னிக்கப்பட்டவர்களாக நீங்கள் உங்களின் வீடுகளுக்குத் திரும்புங்கள். என்னை நீங்கள் பொருந்தச் செய்து விட்டீர்கள். நான் பொருந்திக் கொண்டேன்" என கூறுவான். பெருநாளன்று இந்த சமூகத்தார் பெறும் சன்மானங்களைக் கண்டு விண்ணவர்கள் மகிழ்கிறார்கள்—என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஈகைத் திருநாளன்று பேணப்பட வேண்டிய மற்றொன்று 'ஃபித்ரா' எனப்படும் பொருள் வணக்கமாகும்.

தமக்கும் தம் பொறுப்பில் உள்ள தம் குடும்பத்தார்க்கும் தேவையான உணவிலும் உடையிலும் நிரப்பம் பெற்

றுள்ள ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் 'ஃபித்ரா' வழங்குவது கடமையாகும். அல்லாஹ் அவர்களுக்கருளியுள்ள உணவுப் பொருள்களில் ஒரு பங்கை இல்லாதார்க்கு உவந்து ஈந்து அவர்களின் ஏக்கத்தை விலக்கச் செய்ய ஏவப்பட்ட ஒரு தர்மமாகும் 'ஃபித்ரா''.

ஹனஃபி வழிமுறையாளர்கள் நபர் ஒன்றுக்கு 2.4 கிலோ கோதுமையோ அல்லது அதற்குண்டான விலையையோ, ஷாஃபி வழிமுறையாளர்கள் 3.2 கி. அரிசியையோ அல்லது கோதுமையையோ வழங்கிடல் வேண்டும். நோன்பிருந்த நாட்கள் முடிந்து மறுநாள் புலர்ந்தது முதல் பெருநாள் தொழுகைக்குச் சென்றடைவதற்குள் இது வழங்கப்பட்டு விடவேண்டும். ஒவ்வொருவரும் தமக்காகவும் தம் பொறுப் பில் உள்ள-சிறு குழந்தைகள் உட்பட-அனைவருக்காகவும் ஃபித்ரா கொடுக்கக் கடமைப்பட்டவராவார்.

பசியையும், தாகத்தையும், உடலின் இச்சைகளையும் பூரணமாகப் பொறுத்து, பரமனின் நினைவிலேயே ஒரு மாதத்தை முழுமையாகக் கழித்த தங்களின் உம்மத்துகளால் சின்னஞ்சிறு பிசகுதல்கள் ஏற்பட்டிருந்தாலும் இறைவன் அவற்றைப் பாராமுகங்கொண்டு பொறுத்தருளவே பெரு மானார் (ஸல்) அவர்கள் 'ஃபித்ரா'வை நம்மீது கடமையாக் கினார்கள்.

ஓர் அடியாரின் நோன்பு அவர் ஃபித்ரா—தர்மத்தைச் செலுத்தாதவரை பூமிக்கும் வானத்துக்கும் இடையிலேயே சஞ்சரித்துக் கொண்டிருக்கும் என அண்ணலார் (ஸல்) அவர் கள் அருளிச் சென்றதை ஹழ்லரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்து எச்சரிக்கிறார்கள்.

**யா** அல்லாஹ் ! யா ரஹ்மான் ! ! யா ரஹீம் ! ! !

நேர்வழி காட்டிய எங்களின் ஸர்தார் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது காலம் உள்ளளவும் கணக்கிலடங்காத

அளவு ஸலவாத்துகளையும் ஸலாமையும் பொழிந்தருள் வாயாக!

எங்களின் இரட்சகா!

உனக்காகவே இம் மாதம் முழுவதும் நாங்கள் நோன் பிருந்தோம். உன்னால் அனுமதிக்கப்பட்ட உணவுகள் எங்கள் முன் சித்தமாக இருந்தும் உன் சித்தத்துக்காகவே நாங்கள் அவற்றைப் புசியாது பசித்திருந்தோம். உன்னால் அருளப் பட்ட தண்ணீர் தட்டுப்பாடின்றி எங்களுக்குக் கிடைத்திருந் தும் உன் பொருத்தத்தைப் பெற்றிட ஆசை கொண்டு நாங்கள் அதனைப் பருகாது தாகத்தைச் சகித்திருந்தோம். எங்களின் ஹலாலான மனைவிமார்கள் எங்கள் அருகிலேயே இருந்தும் உன் கட்டளையையேற்று நாங்கள் அவர்களைத் தொடாது எங்களின் ஆசைகளை அடக்கிக் கொண்டோம். எங்களின் இந்த முயற்சிகளும், மற்ற நற்செயல்களும் மறதி யால் நாங்கள் இழைத்து விட்டிருக்கக் கூடிய தவறுகளின் காரணமாகப் பழுதாகிவிட நீ விட்டு விடாதிருப்பாயாக!

மன்னிக்கும் மாபெரும் தயாளனே! எங்களின் மன்னிப் புக் கோரலில் சொட்டிடும் கண்ணீரைக் கண்டு மகிழ்வு கொள்பவனே!! அந்தக் கண்ணீரையே எங்களின் காணிக்கை யாக ஏற்று எங்கள் பாவங்களை மன்னித்தருள்வாயாக! எங் களின் பிழைகளைப் பொறுத்தருள்வாயாக!

எங்களின் தொழுகைகளில்,

எங்களின் நோன்புகளில்,

எங்களின் தர்மங்களில்

நாங்கள் இழைத்து விட்டிருக்கக் கூடிய தவறுகளை எங் கள் மீது இரக்கம் கொண்டு நீ மன்னித்தருள்வாயாக. எங்க ளின் அசதியினாலும் மறதியினாலும் ஏற்பட்டு விட்டிருக்கும் குறைகளை உன் கருணையினால் நிறைவு படுத்தி எங்களின் நன் முயற்சிகளை நீ அங்கீகரித்தருள்வாயாக!

மகத்துவத்தில் மிகைத்த ரமழ்லான் மாதத்தின் பரக்கத்தைக் கொண்டு,

மாதங்கள் ஆயிரத்தினுஞ் சிறந்த 'லைல(த்)துல் கத்ரு' டைய பரக்கத்தைக் கொண்டு,

நேரிய வழியைத் துலக்க வந்த உன் திருமறையாம் அல்குர்ஆனின் பரக்கத்தைக் கொண்டு,

அந்த மாமறையைச் சுமந்த மாநபிகளார், எங்கள் நாயகம், உன் நேசர் பெருமான் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரக்கத்தைக் கொண்டு,

எங்களின் வாழ்வில் வளமும் நலமும் பெருகிடச் செய்வாயாக.

எங்களின் உழைப்புகளிலும் விளைச்சல்களிலும் பாக்கியங்களைப் பெருகச் செய்வாயாக.

பேதங்களை நீக்கி எங்களை ஒன்றுபட்டு உயரச் செய்வாயாக!

எங்களின் பூமியில் அமைதி தழைக்கச் செய்து நிம்மதியோடு எங்களின் நெற்றிகளை உன் திருமுன் பதித்து நாங்கள் வணங்கத் தோதாக எங்களின் இந்த பூமியை விசாலப்படுத்தியருள்வாயாக.

படைப்புகளில் சிறந்தவர்களும் 'அர்ஷ்' என்னும் மணிமண்டபத்தின் பேரொளியும் எங்கள் தலைவருமான முஹம்மத் (ஸல்-அம்) அவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள், வழிவாறுகள் அனைவர் மீதும் அல்லாஹ்வின் அருள் என்றென்றும் பொழியப்படுவதாக.



# துல் ஹஜ் மாதத்தின் பத்து நாட்கள்

புண்ணியமிக்க — லைலத்(த்)துல் கத்ர்—இரவு அமையப் பெற்றிருப்பதன் காரணமாக ரமழான் மாதத்தின் இறுதிப் பத்து நாட்கள் சிறப்பேற்றிலங்குவது போலவே 'அரஃபா வுடைய நாள்' இடைப்பட்டிருப்பது கொண்டு துல் ஹஜ்ஜு மாதத்தின் முதற் பத்து நாட்களும் சிறப்புடையனவாகவே கணிக்கப்படுகின்றன.

وَالْفَجْرِ ۝ وَلَيَالٍ عَشْرٍ ۝

''விடியற் காலையின் மீது சத்தியமாக, பத்து இரவு களின் மீதும் சத்தியமாக'' என்று அல்லாஹ் தன் வேத (89 : 1, 2) வசனங்களில் குறிப்பிடுவது துல்ஹஜ்ஜு மாதத் தின் முந்திய பத்து இரவுகளையே — என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

தியாகத் திருநாளாகிய ஹஜ்ஜுப் பெருநாளுக்கு முந் திய நாளே அரஃபாவுடைய நாள். சுவனத்தில் தம் கவனத் தைப் பிசக விட்டதன் காரணமாக புவனத்தில் இறக்கி விடப்பட்ட மனிதகுல மூலப்பிதா ஹழ்ரத் ஆதம் (அலை) அவர்கள் பல நூறாண்டு காலப் பிரிவினைக்குப் பின் தம் மனைவியார் — அன்னை ஹவ்வா (அலை) அவர்களை மீண் டும் சந்திக்கப் பெற்ற நாளே அரஃபா — அறிந்துகொண்ட — நாள் என பெயர் பெற்றது.

ஆரம்ப காலத்திலேயே அல்லாஹ் தன் தூதர்கள் பல ருக்கு பிரத்தியேகமாக அருள் பாலிக்கத் தெரிந்தெடுத்துக்

கொண்டதன் காரணமாக துல் ஹஜ்ஜு மாதத்தின் முந்திய பத்து நாட்கள் மகத்துவம் பெற்றவையாக விளங்குகின்றன.

''புவன லோகத்தில் இறக்கப்பட்ட ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் தங்களின் அவலத்தை எண்ணிப் புலம்பிய வர்களாக அழுது கண்ணீர் வடித்தபடியே ஆறு நாட்களைக் கழித்து விட்டிருந்தார்கள். சோகம் சூழ அவர்கள் தலை கவிழ்ந்தமர்ந்திருந்த ஏழாம் நாள் காலை இறைவன் ஒரு விண்ணவரைக் கொண்டு, ''ஆதமே! ஏன் இவ்விதம் புலம் பித் துடிக்கிறீர்?'' என வினவச் செய்தான்.

''என் துயரம் மிகப் பெரிது! என் பாவம் என்னைச் சூழ்ந்து கொண்டது. பேறாகக் கிடைத்த, சிறப்பு மிகுந்த, நிலையான சுவன புரியிலிருந்து வெளிப்பட்டு ஈனமுந் தரித் திரமும் கொண்ட அழிவுடைய புவனத்தில் இறங்கிவிட்ட நான் அழுது புலம்பாமல் எப்படி இருக்க முடியும்?'' என ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் கூறினார்கள்.

மறுகணம் அசரீரி முழங்கலாயிற்று : ''ஆதமே! என் சித்தத்தாலேயே உம்மை நான் படைத்தேனல்லவா? என் படைப்புகளிடையே உம்மை சிறப்பேற்க வைத்தேனல்லவா? தனியான ஒரு கண்ணியம் உமக்கேற்படச் செய்தேனல்லவா? என் வாஞ்சையை உம்மீது பொழிந்தேனல்லவா? என் கரங் களாலேயே உம்மைச் சமைத்தேனல்லவா? விண்ணவர் களையும் உம்முன்னே சிரம் பணியச் செய்தேனல்லவா? என் மகிமையினுடையவும் பெருமையினுடையவும் முகட்டிலேயே உம்மை அமரச் செய்தேனல்லவா? இவ்வளவுமிருந்தும் என் ஏவலுக்கு நீர் ஏன் மாறு செய்தீர்? என் கட்டளையை நீர் ஏன் மறந்தீர்? என் கருணையையும் கிருபையையும் நீர் எவ் விதம் மறக்கலாயிற்று?

''என் மாண்பின் மீதும் மகத்துவத்தின் மீதும் சத்திய மாக! உம்மைப் போன்றவர்களைக் கொண்டே இப்பூமியை

நிரப்புவேன். அல்லும் பகலுமாக என்னைப் போற்றி அவர்கள் துதி செய்துக் கொண்டே இருக்கட்டும்; கணப்பொழுதும் சலியாது அவர்கள் வணக்கத்தில் ஆழ்ந்தவர்களாகவே இருந்தாலும் சரியே, என் ஏவலுக்கு மாறு செய்தார்களானால் நான் அவர்களைப் பாவிகளின் கூட்டத்திலாக்கி விடுவேன் — என இறைவனின் சில மொழிகளைக் கேட்ட ஆதம் (அலை) அவர்கள் கைசேதப்பட்டவர்களாக மீண்டும் கதறியழலானார்கள்.

''இந்திய மலை* யொன்றின் மீதமர்ந்து முன்னூறாண்டு காலம் வரை தங்களின் பிழை பொறுக்கத் தேடி அவர்கள் வடித்த கண்ணீர் அருவிகளாகப் பெருகியோடியது. அது ஓடிய புறமெல்லாம் மரங்கள் பசுமையாக வளரலாயின. இறுதியாக ஒரு நாள் அவர்கள் முன் தோன்றிய ஜிப்ரஈல் (அலை) தற்போது 'கஅபா' உள்ள தலத்தை அவர்களுக்குச் சுட்டிக் காட்டி, 'அங்கு சென்று 'துல்ஹஜ்' மாதத்தின் பத்தாம் நாளை எதிர்ப்பார்த்திரும், அல்லாஹ் உம் புலம்பலின் மீது கருணை கொள்ளக் கூடும்' என்று பணித்தார்கள்.

''அதன்படியே ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் நடந்து சென்றபோது அவர்களின் பாதவடிகள் பட்ட இடங்கள் பசுமையடைந்தன. அவற்றுக்கிடைப்பட்ட இடங்கள் பாழ்வெளிகளாய்க் கிடந்தன. மனிதர்கள் மூன்று நாட்கள் நடந்து கடக்கக் கூடிய தொலையை ஹழ்லரத் ஆதம் (அலை) அவர்கள் ஓர் எட்டில் கடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

---

* இலங்கை சரந்தீபிலுள்ள ஆதம் மலையே அது. அக்காலத்தில் இலங்கை இந்திய மண்ணோடிணைந்த ஒரே பூமியாகவே இருந்தது.

''கஅபாவின் தலத்தை அடைந்த அவர்கள் ஏழு நாட்கள் வரை அதனை இடம் சுற்றியே வந்து கொண்டிருந்தார்கள். பிழை பொறுக்கத் தேடி அப்போதும் அவர்கள் அழுது வடித்த கண்ணீர் அவர்களின் கணுக்காலின் உயரம் வரை தேங்கி நின்ற நிலையில், ''ஆதமே! உம் பலஹீனத்தின் பேரில் நான் இரக்கம் கொள்கிறேன்'' என்ற இறை செய்தியும் அசரீரியாக அவர்களுக்கு ஒலித்தது — என மாநபித் தோழர் ஹழ்லரத் வஹப் இப்னு முனப்பஹ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு, தனிமை வருத்த பாலை பூமியில் நடந்து சென்ற அவர்கள் அடுத்த நாளில் ஒரு மலையடிவாரத்தில் — என்றோ பிரிந்த தங்களின் துணைவியார் — மனித குலத்தை ஈன்றெடுத்த அன்னையார் ஹவ்வா (அலை) அவர்களையும் சந்திக்கப் பெற்றார்கள். பிரிந்தவர்கள் இணையப் பெற்ற — அல்லாஹ்வின் அருளிறங்கப் பெற்ற அந்த — 'ஜபலுர் ரஹ்மத்' — மலையடிவாரத்தில் அதே துல் ஹஜ் மாதத்தின் ஒன்பதாம் நாளில் பிரசன்னமாகி, பிழை பொறுக்கத் தேடுவதே ஹஜ்ஜின் பிரதான கடமையாக விதிக்கப்பட்டுவிட்டதெனில் அந்நாட்களின் மகத்துவமும்தான் எத்தகையது!

இறைவனின் தோழராக — கலீல் — என்னும் பரிவட்டத்தை ஏற்க நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டதும் இந்நாட்களில்தான்!

''மாதங்களனைத்திலும் தலைமையானதாக ரமழ்லான் இருப்பதைப் போலவே மாதங்களனைத்திலும் புனிதம் மிகுந்தது 'துல் ஹஜ்'—என பெருமானார் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டதாக ஹழ்லரத் அபூ ஸஈத் அல் குத்ரீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

துல் ஹஜ் மாதத்தின் முதற் பத்து* நாட்களில் ஒரு நாள் நோன்பிருப்பது அவ்வாண்டு முழுவதும் நோன்பிருந்ததற்கொப்பாகும். அதன் முதற் பத்து இரவுகளில் ஓர் இரவு விழித்து வணங்குவது அவ்வாண்டு முழுவதும் விழித்து வணங்குவதற்கொப்பாகும் என அண்ணலார் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டதாக ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

துல் ஹஜ் மாதத்தின் முதற் பத்து நாட்களை வணக்க வழிபாடுகளால் அழகு படுத்துங்கள். ஏனெனில் அல்லாஹ் அந்நாட்களுக்குச் சிறப்பை வழங்கியுள்ளான். அதன் இரவுகளும் அதே சிறப்பையுடையனவே. அவ்விரவுகளையும் வணக்க வழிபாடுகளால் அழகுபடுத்துங்கள் என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டு அலீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள். அல்லாஹ் நம்முடைய எல்லா நன்முயற்சிகளையும் ஏற்று பிழை பொறுத்தருளப் போதுமானவன்.

---

* முதற் பத்து நாட்கள் என பேச்சு வழக்காகக் குறிப்பிடப்பட்டிருந்தாலும் பத்தாம் நாளாகிய ஹஜ்ஜுப் பெருநாளன்று நோன்பிருப்பதை பெருமானார் (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள்.



"அல்லாஹ்வே! ரஜபிலும் ஷஅபானிலும் எங்களுக்கு உன் பாக்கியங்களை வழங்கி ரமழானை நாங்கள் அடையச் செய்வாயாக!''

S. UMAR GAYYAM. Yaseeni BA, B.C

# அருளிறங்கும் பருவகாலம்

ஹாஜி எம். எ. ஷாஹுல் ஹமீது அண்டு ஸன்ஸ்
புத்தக வியாபாரம்
10, லஹரோட், திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
Ph: [illegible]

எம்.எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்
125, இராமசாமித் தெரு, சென்னை—600 001
தொலைபேசி எண்: 514535



நஃபிலான வணக்கங்களை நினைவூட்டும் என் முயற்சியில் மற்றொரு படிக்கல் இது!

'ஆஷூரா நாளின் சிறப்'பையடுத்து 'பரக்கத்துடைய பராஅத் இரவு', 'கண்ணியமிக்க—லைல(த்)துல் கத்ர் — இரவு', 'தராவீஹ் துஆ' ஆகிய கையடக்க வெளியீடுகளும் வாசக அன்பர்களால் வரவேற்கப்பட்டதுடன், அவற்றைப் பெருவாரியாக வாங்கி இலவசமாகப் பங்கிடுவதில் நல்லோர் பலர் காட்டிய பேரார்வம் தொடர்ந்த என் முயற்சிக்குத் தூண்டுகோலாயமைந்தது!

'அருளிறங்கும் பருவ காலமா'ய் விளங்கும் ரஜப் — ஷஅபான் — ரமழ்லான் ஆகிய மாதங்களின் சிறப்பை விளக்குவதே இந்த என் முயற்சி. ஒன்றையடுத்தொன்றாய் அவை வணக்க வழிபாடுகளுக்கென்றே வகுக்கப்பட்டுள்ளமையை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருவாய் மொழிகள் நமக்கு உணர்த்துகின்றன.

நன்மைகள் சித்தப்படுத்தப்படும் மாதம் ரஜப். அவை ஷஅபானில் பங்கு பிரிக்கப்படுகின்றன. அள்ளி வழங்கப்படும் ரமழ்லான் மாதமோ ஒரு சுரபி!

அம்மாதத்தில் பகற்காலங்களில் பசித்து நோன்பிருக்க வேண்டுமென்பது அல்லாஹ்வின் வேதக்கட்டளை:

இரவுகளில் விழித்து, தொழுதிறைஞ்சுவது தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் வழிமுறை.

தர்மத்தின் வாசல்கள் விரியத் திறக்கப்பட வேண்டிய மாதம் அது.

அல்லாஹ் தன் தயாளத்தை அகிலத்தின் மீது நிழலிடச் செய்கிறான் அம்மாதத்தில்!

பசித்திருந்து பரமனுக்கு சிரம் வணங்கும் நல்லடியார்களுக்கே சோபனம்!

விழித்திருந்து இறைவனின் திருமுன் வழுத்தேந்தும் கரங்களுக்கே மங்களம்!

அல்லாஹ் எல்லா நன்முயற்சிகளையும் ஏற்று அருள் பாலிப்பானாக.

இந்த என் முயற்சியில் நான் இழைத்து விட்டிருக்கும் குற்றங்களை மன்னித்தருள்வானாக.

கற்றோர்களின் கண் கொண்டு இதன் குறைகளை நீங்கச் செய்து நிறை தந்தருள்வானாக.

இதன் ஆக்கப் பணியில் எனக்குதவிய சகோதரர் — பிறை பிரிண்டர்ஸ் — கஸ்ஸாலி மற்றுமுத் ஃபாரூக் அவர்களுக்கு என் நன்றி.

வஸ்ஸலாம்.

எம் எஸ். முஹம்மது தம்பி

---

குறிப்பு : 19—ம் பக்கத்தில் மூன்றாவதாக தரப்பட்டுள்ள 'துஆ'வை ரப்பிGஃபிர் — என G-ன் ஒலி வரும்படியாக கவனமுடன் ஓத வேண்டும். G-க்கு பதிலாக K-ன் ஒலி வராமலிருத்தல் அவசியம்.